

அம்புலிமாமா மதிமுகம் : 58 டிசம்பர் : 2005 புன்னகை : 12



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக


















**SUBSCRIPTION**

For USA and Canada
Single copy $2
Annual subscription $20

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal,
Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.144/- புக்போஸ்டில் உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# மனத்தில் உறுதி வேண்டும்!

இந்தியா அமைதியை விரும்பும் நாடு என்று உலகில் உள்ள அனைவரும் அறிவார்கள். ஆனால் கடந்த ஓராண்டில் இந்தியாவின் அமைதியைக் குலைக்கும் வண்ணம் இயற்கையாலும், மனிதர்களாலும் ஏராளமான நிகழ்ச்சிகள் நடந்து விட்டன.

மகாராஷ்டிரா, குஜராத், மேற்கு வங்காளம், ஒரிசா, ஆந்திரா, கர்நாடகா, தமிழ்நாடு போன்ற பல மாநிலங்கள் தொடர்ந்து பெய்த கனத்த மழையினாலும், வெள்ளத்தினாலும் பல சேதங்களுக்குட்பட்டன. ஆண்டின் இறுதியில் காஷ்மீரில் ஏற்பட்ட மாபெரும் நிலநடுக்கத்தால் பல்லாயிரக்கணக்கான மக்கள் உயிரிழந்தனர். தீபாவளிப் பண்டிகைக்கு இரண்டு நாள்கள் முன்பாக, தீவிரவாதிக ளின் குண்டு வெடிப்பு சம்பவம் தில்லியில் பல அப்பாவி மக்களின் உயிரைக் குடித்தது. இவை அனைத்தும் நமக்கு இத்தகைய தண்டனை தேவையா என்று நினைக்க வைத்து விட்டது.

உங்கள் பத்திரிகை மனிதர்களின் பொறுப்பற்ற செயல்களால் இயற்கையின் சீற்றம் தூண்டப்படும் விஷயத்தைப் பற்றி எச்சரித்துக் கொண்டுதான் இருந்தது. இயற்கையின் சீற்றத்தைத் தவிர, சில மனிதர்களால் சமுதாயம் முழுவதற்கும் இழைக்கப்படும் தீங்குகளுக்கு நம்மிடையே குறைந்து வரும் மனித நேயத்தைத்தான் காரணமாகக் கூற முடியும். அத்தகைய மனித நேயம் மீண்டும் நம்மிடையே புத்துணர்ச்சி பெறுமாறு செயற்படுவது நமது இளைய சமுதாயத்தின் கைகளில்தான் இருக்கிறது.

இலட்சக்கணக்கான மக்களின் துயரத்தில் அம்புலிமாமா பங்கு கொள்ள விரும்புகிறது. வரப்போகும் புத்தாண்டிலாவது, மக்கள் மன உறு தியுடன் செயற்படுவார்கள் என்று நம்புவோம்!

ஆசிரியர் : **விஸ்வம்**







# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (ஏப்ரல்)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



"வேலைக்கிடையே உறங்கிய தண்டபாணியை எதற்கு வேலையில் அமர்த்தினீர்கள்?" என்று ஜமீன்தாரின் மனைவி அவரை ஆச்சரியத்துடன் கேட்டாள்.

அதற்கு ஜமீன்தார் "தண்டபாணி இரவு முழுக்க வேலை பார்த்தான். அதனால் பகலில் களைத்து போய் தூங்கிவிட்டான். இரவில் நன்றாக வேலை பார்த்த தண்டபாணிதான் இந்த வேலைக்கு பொருத்தமானவன். ஆனால் ஆறுமுகமோ பகலில் நன்றாக வேலை பார்க்கிறான் என்றால் இரவில் தூங்கியிருப்பான்" என்றார்.

உடனே அவருடைய மனைவி "ஆறுமுகம் உங்களிடம் நல்ல பெயர் வாங்க இரவிலும் காவல் காத்து பகலிலும் வேலை செய்திருக்கலாம் அல்லவா? தண்டபாணி அலட்சியமாக தன் வேலையைப் பார்த்துக் கொண்டிருந்திருப்பான். அதனால் அவன் தூங்கி இருப்பான். அதனால் நீங்கள் தண்டபாணியை பணியில் அமர்த்தி தவறு செய்து விட்டீர்கள் என்று நினைக்கிறேன்" என்றாள்.

அதற்கு ஜமீன்தார் "ஒருவர் தொடர்ந்து ஓய்வு எடுக்காமல் வேலை செய்தால் அவர் சீக்கிரம் களைத்து விடுவார். அதனால் அவரால் ஒரு வேலையையும் முழுமையாக செய்ய முடியாது. ஒரு வேலை செய்தால் அவருக்கு ஓய்வு அவசியம். எனவே வேலையும், அதற்குரிய ஓய்வு பெறும் தண்டபாணிதான் இந்த வேலைக்கு பொருத்தமானவன். நான் சரியான ஆளைத்தான் பணியில் அமர்த்தியிருக்கிறேன்" என்று ஜமீன்தார் கூறினார்.

தன் கணவனின் சமயோஜித புத்தியை எண்ணி ஜமீன்தாரின் மனைவி மனத்திற்குள் அவரைப் பாராட்டிக் கொண்டாள்.

**க. அகல்யா,** (5ஆம் வகுப்பு) த.பெ. கந்தசாமி,
எண் 7, சென்ட்ரல் அவென்யூ IRWO ரயில் விகார்,
K.சாத்தனூர் சாலை, திருச்சிராப்பள்ளி - 620 021.



# யாரிடம் கேட்பது?

ரவியும், சந்திரனும் சிறு வயது முதல் நண்பர்கள். இருவரும் ஒரே பள்ளியில் படித்தனர். படிப்பு முடிந்ததும் ரவி அப்பள்ளியிலேயே ஆசிரியரானான். சந்திரன் ஜமீன் தாரிடம் திவானாகச் சேர்ந்தான்.

இருவரும் நெருங்கிய நண்பர் களாயினும், ஒரு விஷயத்தில் அவர்கள் இருவருக்கும் வேறுபாடு இருந்தது. எந்த வேலையைச் செய்வ தானாலும் ரவி மற்றவர்களை கலந்து ஆலோசித்த பிறகே செய்வான். ஆனால் சந்திரன், பிறரைக் கலந்து ஆலோசிக்க மாட்டான். தான் எடுத்த முடிவு தவறாக இருந்தாலும் அதைப் பற்றி கவலைப்பட மாட்டான்.

இரு நண்பர்களும் வாரம் ஒரு முறை சனிக்கிழமையன்று சந்தித்து மலைமீது இருந்த கிருஷ்ணர் கோயிலுக்குச் செல்வது வழக்கம்.

ஒரு சனிக்கிழமையன்று வழக்கப் படி அவர்கள் படியேறி கோயிலை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் போது, கோயிலிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த ஒருவன், ''கோயில் மூடியிருக்கிறது'' என்று அவர்களிடம் கூறினான்.

''இப்போது என்ன செய்யலாம்?'' என்று ரவி, சந்திரனைக் கேட்டான். ''யாரோ ஒருவன் ஏதோ சொன்னான் என்பதற்காக நீ ஏன் பெரிது படுத்துகிறாய்? நாம் கோயிலுக்கு செல்வோம்!'' என்றான் சந்திரன். ''இல்லை! வேறு யாரையாவது கேட்கலாம்!'' என்ற ரவி, படிகளில் இறங்கி வந்து கொண்டிருந்த இன்னொரு ஆளிடம் ''கோயில் திறந்திருக்கிறதா?'' என்று கேட்டான். அதற்கு அந்த ஆள் தனக்குத் தெரியாது என்று பதிலளித்து விட்டுச் சென்று விட்டான். உடனே சந்திரன், ''நீ ஏன் வீணாக இந்த சின்ன விஷயத்திற்கு இத்தனை பேரைக் கேட்கிறாய்?'' என்று கூறி ரவியை கோயிலுக்கு

-அமுதா-

அழைத்துச் சென்றான். மேலே சென்று பார்த்தால் கோயில் திறந்தே இருந்தது. உடனே சந்திரன், ''பார்த்தாயா ரவி! கோயில் திறந்து தான் இருக்கிறது. இதற்குத்தான் நான் உன்னிடம் அடிக்கடி சொல்கிறேன். யார் என்ன சொன்னாலும், அதை அப்படியே நம்பி விடக் கூடாது. அனாவசியமாக கண்டவரிடமும் கேட்டால் அல்லது பேசினால், வீணாகக் குழப்பமும், வருத்தமும் தான் உண்டாகும்!'' என்றான்.

பிறகு கோயிலில் தரிசனம் முடிந்த பிறகு இருவரும் படியிறங்கி மலையடிவாரத்தை அடைந்தனர். அங்கு உட்கார்ந்திருந்த ஒரு பிச்சைக் காரனுக்கு, ரவி நாலணா தானம் கொடுத்தான். அதற்கு பிச்சைக்காரன், ''முன்பெல்லாம் ஒரு ரூபாய் தர்மம் செய்வீர்கள். இப்போது நாலணா தானா?'' என்று கேட்டான்.

உடனே ரவி, ''அப்பா! நான் பிரம்மச்சாரியாக இருந்தபோது, ஒரு ரூபாய் தானம் செய்தேன்! பிறகு திருமணமானதும், செலவுகள் அதிகரித்தன. ஆகையால் எட்டணா தானம் செய்ய ஆரம்பித்தேன். இப்போது நான் சம்சாரி. என் பெண் களுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும். அதற்கு ஏராளமாக பணம் சேமிக்க வேண்டும். அதனால் தானத்தை நாலணாவாகக் குறைத்து விட்டேன்! நான் செய்தது சரிதானே!'' என்று அவனிடமே அபிப்பிராயம் கேட்டான்.

''சரிதான்! எனக்கு சேர வேண்டிய பணத்தில் நீங்கள் உங்கள் பெண் களுக்குத் திருமணம் செய்து வைக்கப் பார்க்கிறீர்களா?'' என்று கேட்டானே பார்க்கலாம்!

திகைத்துப் போய் நின்ற ரவியிடம், ''உனக்கு நன்றாய் வேண்டும். உன் விருப்பத்திற்கு பிச்சைக்காரனிடம் அபிப்பிராயம் கேட்டால், இப்படி வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டியதுதான்! இனி யாவது யாரிடம் என்ன கேட்பது என்று புரிந்து கொள்!'' என்றான் சந்திரன்.

அன்று முதல் ரவியும் தன் பழக்கத்தை மாற்றிக் கொண்டான்.





# மந்திரவாதியின் தொப்பி

**வா**ஞ்சிநாதன் என்ற வைத்தியரிடம், ஆதித்தன் எனும் வாலிபன் உதவியாளனாகப் பணி புரிந்து வந்தான். அதே கிராமத்தில், மாயாவி என்ற வயதான மந்திரவாதியும் வசித்து வந்தான். தனது மந்திர சக்தியினால் பல தீர்க்க முடியாத நோய்களையும் குணப்படுத்தினான்.

ஆதித்தனுக்கு மாயாவியிடம் இருந்து மந்திர தந்திர சக்திகளைப் பெற ஆவல் உண்டாயிற்று. ஒருநாள் அவன் மாயாவியிடம் சென்று, அவருடைய விசேஷ சக்திகளை தனக்கு அளிக்குமாறு வேண்டினான். அதற்கு மாயாவி, ''நான் என்னுடைய சக்திகளை அவற்றைப் பெற தகுதியானவனுக்கு மட்டுமே அளிக்க முடியும்'' என்று சொல்லி அனுப்பி விட்டான்.

சில நாள்கள் கழித்து, மாயாவி கடும் நோயால் பாதிக்கப்பட்டு, வாஞ்சிநாதனிடம் வந்தார். அவரைப் பரிசோதித்த வைத்தியர், இன்று மருந்து தருகிறேன். அது எவ்வாறு பலன் அளிக்கிறது என்று பார்த்து, நாளை மீண்டும் மருந்து தருவேன். வந்து வாங்கிக் கொள்!'' என்றான்.

''என்னால் நடக்கவே முடியவில்லை. நாளைக்கு மருந்தை யாரிடமாவது கொடுத்தனுப்பி விடு'' என்று சொல்லிவிட்டு மாயாவி வீடு திரும்பினார். மறுநாள் வாஞ்சிநாதன் ஆதித்தன் மூலமாக மருந்து கொடுத்து அனுப்பினான். ஆதித்தன் மாயாவியை அடைந்ததும், அவன், ''எனது உயிர் பிரியும் வேளை வந்து விட்டது. இறப்பதைப் பற்றி நான் வருந்தவில்லை. ஆனால் என்னுடைய மந்திர தந்திர வித்தைகள் என்னுடனே மறைந்து விடுமே என்று எண்ணித்தான் கவலை அடைகிறேன்'' என்றான்.

உடனே ஆதித்தன் ஆவலுடன், ''அப்படியானால் அவற்றை எனக்கு

-காயத்ரி சங்கரன்-



இப்போதாவது சொல்லிக் கொடுங்களேன்!'' என்று கெஞ்சினான். அவனை உற்றுப்பார்த்த மாயாவி, ''தம்பி! அவற்றைக் கற்றுக் கொடுக்க என்னால் இப்போது இயலாது ஒரேயொரு மந்திர சக்தியை மட்டும் உனக்கு அளிக்கிறேன்,'' என்று, மேஜையிலிருந்த ஒரு தொப்பியை அவனிடம் கொடுத்து, ''இது மந்திர சக்தி வாய்ந்த தொப்பி. இதைத் தலையில் அணிந்து கொள். இறந்த பிறகும் ஆவி வடிவத்தில் நான் இந்த தொப்பிக்குள் சில காலம் இருப்பேன். இதை நீ ஏதாவது ஒரு நபருடைய தலையில் வைத்தால், அவனுக்கு அன்றைய தினம் என்ன நடக்கும் என்று நான் உன் காதில் கூறுவேன். நீ அதை அப்படியே அவனிடம் சொல்! அவன் தரும் பணத்தைப் பெற்றுக் கொள்! ஒரு நாளில் ஒரேயொரு முறை மட்டுமே இதைப் பயன்படுத்து!'' என்றான்.

ஆதித்தன் அதைப் பெற்றுக் கொண்டு வாஞ்சிநாதனிடம் திரும்பி வந்து மாயாவியின் நிலைமையை விளக்கினான். அன்றிரவே மாயாவி இறந்து போனான். அவனுடைய அந்திமக் கிரியைகளை ஊரார் கூடிச் செய்தனர். ஆதித்தன் அந்தக் கிராமத்தை விட்டு, வேறொரு கிராமத்திற்குச் சென்று விட்டான். புதிய கிராமத்தில் ஒரு தெரு வழியே ஆதித்தன் சென்று கொண்டிருந்த போது, அவன் தொப்பியில் சலனம் உண்டாயிற்று. ''நான் உன் தொப்பிக் குள் வந்து விட்டேன். அதோ, எதிரில் வருகிறானே! அவன் பெயர் நந்தன். அவனிடம் இன்று நடக்கவிருப்பதைப் பற்றி ஆருடம் சொல்வதாகச் சொல்!'' என்றது மாயாவியின் குரல்.

ஆதித்தன் மாயாவியின் ஆவி கூறியபடி, அந்த நபரை அணுகி, ''ஐயா, என்னிடமுள்ள தொப்பி மந்திர சக்தி வாய்ந்தது. அதன் மூலம் உங்கள் பெயர் நந்தன் என்று அறிந்தேன். உங்களுக்கு இன்று நடக்கப் போகும் முக்கியமான சம்பவத்தைப் பற்றி சரியாக என்னால் கூற முடியும். அதற்கு நீங்கள் இருநூறு பொற்காசு தர வேண்டும்!'' என்றான். தங்கள் கிராமத்திற்கு வந்த புதிய மனிதன் தன் பெயரைச் சரியாக சொன்னதின் பேரில், அந்த ஆளுக்கு அவன் மீது நம்பிக்கை ஏற்பட்டது. அதனால் இருநூறு காசு தர அவன் ஒப்புக் கொள்ளவும், ஆதித்தன்

தொப்பியை அவன் தலைமீது வைத்தான். உடனே அவன் செவிகளில் மந்திரவாதி மாயாவியின் குரல் ஒலித்தது. ''பூங்காவனம் என்ற ஆள் இந்த நந்தனிடமிருந்து ஆயிரம் பொற் காசுகள் கடன் வாங்கி, நெடுங்கால மாகத் திருப்பித் தராமல் இருந்தான். இன்று அவனைத் தேடிப் போனால் கடன் வசூலாகிவிடும்,'' என்ற வார்த்தைகளைக் கேட்ட ஆதித்தன் அதை அப்படியே நந்தனிடம் கூறி னான். பிறகு இருவருமாக பூங்கா வனத்தின் வீடு நோக்கி சென்றனர்.

நந்தனைக் கண்டவுடன் பூங்கா வனம், ''உங்களைத் தேடி நானே வருவதாக இருந்தேன்! நீங்களே வந்துவிட்டதில் மிக்க மகிழ்ச்சி. உங்களுடைய கடனான ஆயிரம் காசுகளையும், வட்டி இருநூறு காசுகளுடன் சேர்த்துத் தருகிறேன். பெற்றுக் கொள்ளுங்கள்!'' என்றான்.

மிகவும் மகிழ்ச்சியடைந்த நந்தன், தான் பேசியபடி இருநூறு காசுகளை ஆதித்தனுக்குக் கொடுத்தான். இந்தச் செய்தி அக்கிராமத்தில் காட்டுத் தீ போல் பரவியது. ஆதித்தனின் புகழ் ஓங்கியது. ஆனால் மாயாவிக் கிழவன் கூறியவாறு, ஆதித்தன் ஒரு நாளைக்கு ஒரேயொரு முறை மட்டுமே தொப்பியைப் பயன்படுத்தினான். ஆதித்தன் கூறும் ஆரூடம் பலிக்க, அவனைத் தேடி வருவோர்களின் எண்ணிக்கை அதிகரிக்க, அவனுடைய வருமானமும் மிகவும் அதிகரித்தது.

இவ்வாறு ஓராண்டு கழிந்தபின், ஆதித்தன் தனவந்தன் ஆனான்.



ஒருநாள் அவனுடைய செவிகளில் மாயாவிக் கிழவன், ''உன் மூலம் பலருக்கு உதவி செய்ய முடிந்தது குறித்து எனக்கு மகிழ்ச்சி. இனி என் ஆத்மா சாந்தி அடையும். நான் உன்னை விட்டு, தொப்பியை விட்டுச் செல்கிறேன்,'' என்று கூறினான்.

இதனால் ஆதித்தன் ஊராரிடம் தன்னுடைய ஆரூட சக்தி மறைந்து விட்டது என்று அறிவித்தான். ஆனால் பலரும் அதை நம்ப மறுத்தனர். சிலர் மன்னரிடம் சென்று ஆதித்தன் வேண்டுமென்றே அவ்வாறு செய்கி றான் என்று கோள் மூட்டினர். உடனே மன்னரும் ஆதித்தனை அழைத்து வரச் சொன்னார். ஆதித்தன் வந்ததும் அவனை உண்மையைச் சொல்லு மாறு மிரட்டினார்.

ஆதித்தனும் தனக்கு ஒரு மந்திரத் தொப்பி கிடைத்ததாகவும், அதன்

உதவியால் ஆரூடம் கூறியதாகவும், இப்போது அது சக்தியை இழந்து விட்டதாகவும் கூறினான். ஆனால் மன்னர் அவன் கூறியதை நம்பாமல் ''ஆதித்தா! இன்று எனக்காக நீ ஒரு விஷயத்தில் ஆரூடம் கூறித்தான் ஆக வேண்டும்!'' என்று அவனை அருகில் அழைத்து ரகசியமாக, ''நான் மாளவச் சக்கரவர்த்தியின் பெண் வித்யாவை மணம்புரிய விரும்புகிறேன். ஆனால் சக்கரவர்த்திக்கு இதில் விருப்ப மில்லை. என்னிடம் ஒரு மந்திர சக்தி வாய்ந்த கத்தி உள்ளது. இதோ பார்! இதுதான் அந்த கத்தி! சக்கரவர்த்தி யுடன் இதைக் கொண்டு நேருக்கு நேர் மோதி அவரை வீழ்த்த விரும்பு கிறேன். என்னுடைய விருப்பம் நிறைவேறுமா என்று சொல்!'' என்று உத்தரவிட்டார்.

மன்னரின் ஆணையை மீற முடியாமல், ஆதித்தன் தொப்பியை மன்னரின் தலையில் வைத்தான். அடுத்த கணமே, மன்னருடைய கையிலிருந்து கத்தி நழுவிக் கீழே விழுந்தது. அவருடைய கை அசைக்க முடியாமல் செயலற்றுப் போயிற்று. பீதியடைந்த மன்னர், ''ஐயோ! என்ன ஆயிற்று எனக்கு? ஆதித்தா, நீ ஏதாவது மந்திரம் போட்டாயா? என் கையை சரியாக்கு!'' என்று கூச்சலிட்டார்.

உடனே ஆதித்தனின் செவிகளில் மாயாவியின் குரல் ''பயப்படாதே! உன்னை மீட்கத்தான் நான் மீண்டும் தொப்பிக்குள் வந்திருக்கிறேன். மன்னருடைய கெட்ட எண்ணத்திற்கு, நான் உதவி செய்ய மாட்டேன். அவருடைய ஆசையை கைவிடச் சொல். அப்போதுதான் அவருடைய கை சரியாகும்!'' என்று ஒலித்தது. ஆதித்தனும் அதை அப்படியே மன்னரிடம் கூறினான்.

அதைக் கேட்ட மன்னரும், ''சரி, சரி! ந ான் என் ஆசையை விட்டு விடுகிறேன்!'' என்று கூற, மன்ன ரின் கை சரியாகி விட்டது. உடனே அவர், ''ஆதித்தா! உன்னுடைய தொப்பியின் மகிமையால், நான் மனம் திருந்தி விட்டேன். த வறான செயலைப் புரியாமல் என்னைக் காத்ததற்காக உனக்கு நன்றி !'' என்று கூறி, ஆதித்தனுக்கு நிறைய பரிசுகள் தந்து அனுப்பி வைத்தான்.





# பயங்கரப் பள்ளத்தாக்கு

## 3

*(கேசவன் பார்த்த விசித்திர மிருகம் பிரம்மபுரியின் சேனாதிபதியையும், ஒரு வீரனையும் கொன்று விட்டது. தப்பித்துச் சென்ற மற்றொரு வீரன் தலைநகருக்குச் சென்று விஷயத்தைக் கூற, பல வதந்திகள் பரவின. கேசவனின் தந்தை, கேசவனிடம் தான் கேள்விப்பட்ட விஷயங்களைக் கூறினார்.)*

**த**ந்தையின் வார்த்தைகளைக் கேட்ட கேசவன் வியப்புற்றான். புல் மேய்ந்து கொண்டிருந்த அந்த விசித்திர மிருகத்தை உற்று நோக்கியவாறே, ''இப்போது எனக்கு விளங்குகிறது. நேற்றிரவு நமது வீட்டிற்கு நம்முடைய பசுக்களோடு வந்த அதிசய மிருகம் இதுதான்! ஆனால் இரவு நேரத்தில் இது மீண்டும் காட்டிற்குச் சென்று விட்டது என்று தோன்றுகிறது. இன்று காலை இதை சேனாதிபதியும், அவனுடைய வீரர்களும் இதை பலவந்தமாக இழுத்துச் செல்ல முயன்றனர். ஒருவன் இதனுடைய கழுத்தினில் கயிறைக் கட்டி, தன்னுடைய குதிரையுடன் சேர்த்து இழுத்துச் சென்றான். செல்லும் வழியிலே, இது அவனையும், சேனாதிபதியையும் கொன்று விட்டது என்று தோன்று கிறது. பார்ப்பதற்கு சாதுவாகத் தோன்றும் இந்த அதிசய மிருகம் அவர்களைக் கொன்றிருக்கும் என்ற செய்தியே விசித்திரமாக உள்ளது. ஆனால் இதனுடைய கொம்பில் உள்ள இரத் தத்தைப் பார்த்தா ல்,



அவர்களை இது கொன்றிருக்கலாம் என்றே தோன்றுகிறது'' என்றான்.

தன்னுடைய மகனுடன் இத்தனை நேரம் மும்முரமாக உரையாடிக் கொண்டிருந்த கிழவர் அந்த மிருகம் அங்கிருப்பதையே அதுவரை உணர வில்லை. கேசவன் தந்தையை அந்த மிருகத்தின் அருகில் அழைத்துச் சென்று ரத்தம் தோய்ந்த கொம் பினைக்காட்டினான். ''அப்பா! அதன் முகத்தில் கூட இரத்தம் தோய்ந்து இருப்பதைப் பாருங்கள்!'' என்றான்.

''அப்படியானால் தலைநகரில் பரவியுள்ள வதந்திகள் ஓரளவு உண்மைதான் என்று தோன்றுகிறது. ஆனால் கேசவா, நீ அயல் நாட்டு ஒற்றன் என்றும், சேனாதிபதி உயிரிழந்தது உன்னால் தான் என்றும் கூறுகின்றனரே! அதற்கு என்ன செய்யலாம்?'' என்றார் கிழவர்.

''இதில் எனக்கு சிறிதுங்கூட சம்பந்தமில்லை. சேனாதிபதியும், மற்றவனும் சாதுவாக மேய்ந்து கொண்டிருந்த மிருகத்தை கயிறு கட்டி பலவந்தமாக இழுத்துச் செல்ல முயன்றனர். அதனால்தான், இந்த மிருகம் மிரண்டு போய் அவர்களைக் கொன்று விட்டதுபோலும்!'' என்றான் கேசவன்.

''அதை மற்றவர்கள் நம்ப வேண்டுமே! மன்னரின் வீரர்கள் உன்னைப் பிடிக்க வருகின்றனர். அவர்கள் கையில் சிக்காமல் நீ தப்பித்து ஓடி விடு. உன்னிடம் வில் அம்புகள் உள்ளன. இதோ, இந்த கத்தியையும் எடுத்துக் கொள்!'' என்றார்.

அவரிடமிருந்து கத்தியைப் பெற்றுக் கொண்ட கேசவன், ''அப்பா, நீங்கள் மட்டும் தனியாக என்ன செய்வீர்கள்?'' என்று கேட்டான். ''என்னைப் பற்றி கவலைப்படாதே! நான் எப்படியாவது சமாளித்துக் கொள்வேன். அவர்களுடைய கண் களில் படாமல் சில நாள்கள் தலை மறைவாக இருப்பேன். இந்த பசுக்களையும் இங்கிருந்து அழைத்துச் சென்று வேறு எங்காவது ஒளித்து விடுகிறேன். ஆனால் உனக்குத்தான் அபாயம் அதிகம். நீ உடனே ஓடி விடு!'' என்றார்.

அவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போது, தூரத்தில் குதிரைகளின் குளம்பொலி கேட்டது. கிழவர் பரபரப்படைந்து கேசவனை உடனே ஓடி ஒளியச் சொன்னார்.

கேசவன் அந்த அதிசய மிருகத்தின் அருகில் சென்று, ''அவர்களிடம் இருந்து உடனே தப்பித்து ஓட வேண்டுமென்றால், இதனுடைய உதவியினால்தான் முடியும். நான் இதன்மீது ஏறி அமர்ந்து சவாரி செய்து ஓடி ஒளிகிறேன்!'' என்று கூறி அதன்மீது அமர்ந்து, ''மிருகமே! என்னை எங்கு வேண்டுமானாலும் அழைத்துச் செல்! என்னைப் பிடிக்க வருபவர்களிடமிருந்து நான் உடனே தப்ப வேண்டும்!'' என்றான். அந்த மிருகம் தன் கண்களை சற்றே மூடிக் கொண்டு, பிறகு புயல் வேகத்தில் மலையை நோக்கி ஓடியது. அந்த மிருகம் மலைமீது பாய்ந்து ஓடிய வேகத்தைக் கண்டு கேசவன் பயந்து போனான். செல்லும் வழியெல்லாம் பெரிய பெரிய மரங்களும், புதர்களும், குகைகளும் அச்சமூட்டுவனவாக இருந்தன. இடையிடையே பாய்ந்து செல்லும் புலிகளும், சிறுத்தைகளும், பாம்புகள் போன்ற பயங்கர ஜந்துக்களும் அவன் ரத்தத்தை உறைய வைத்தன. தான் எடுத்த முடிவு சரிதானா என்றே பயம் ஏற்பட்டது. மன்னருடைய வீரர்கள் கைகளிலேயே சிக்கியிருக்கலாமோ என்று கூட அவனுக்குத் தோன்றியது.

பேசாமல் அதன் முதுகிலிருந்து குதித்து விடலாமா என்று தோன்ற, அவ்வாறு குதித்தால் உடனே ஏதாவது புலிக்கு உணவாக வேண்டியதுதான் என்றும் புரிந்தது. இவ்வாறு கேசவன் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டிருக்க, இறுதியில் ஒரு



குகையின் முன் சென்று அந்த மிருகம் நின்று விட்டது. குகைக்குள்ளிருந்து ''ஓம், ஹ்ரீம், பட்'' போன்ற மந்திரங்களின் ஒலியும், கரும் புகையும் வெளியே வந்து கொண்டு இருந்தன. மிருகத்தின் முதுகிலிருந்து இறங்கிய கேசவன், அந்தக் குகையை அச்சத்துடன் உற்று நோக்கினான்.

குகையின் உட்புறம் ஒரே இருட்டு, திடீரென மந்திர உச்சாடனங்களும், புகையும் நின்றன. குகைக்குள்ளே யாராவது மர்ம மனிதன் இருக்கிறானோ, இல்லை பயங்கர ராட்சசன் யாராவது இருக்கிறானோ என்று நினைத்த கேசவனுக்கு உடலெல்லாம் பதறியது. அந்த இடத்தை விட்டு ஓடி விட்டால் போதும் என்று தோன்றியது. தன்னை அந்தப் பயங்கரமான குகை வாயிலில் கொண்டு வந்து ஏன் அந்த மிருகம் நிறுத்தியது என்று



அவனுக்குப் புரியவில்லை. எதுவாக இருந்தாலும் சரி, இங் கிருந்து ஓடி விட வேண்டும் என்ற நோக்கத்துடன், அந்த மிருகம் இருக்குமிடத்தை நோக்கினான். இதற்குள் அது அவனை விட்டு வெகுதூரம் விலகிப் போய் நின்றது. ஓடிப்போய் அதன் முதுகில் ஏறிக் கொள்ளலாம் என்று நினைக்கையில், திடீரென அது சரிவில் எங்கோ இறங்கி விட்டது.

தப்புவதற்கு வேறு வழியில்லாமல் போனதைக் கண்ட கேசவன் கடைசியில் வருவது வரட்டும் என்ற தீர்மானத்துடன், கையில் உருவிய வாளுடன் குகைக்குள் செல்ல முயன்றான். திடீரென குகையில் ஒரு ஒளி வெள்ளம் பாய்ந்து பிரகாச மாகியது. அந்த ஒளியில் கேசவன் கண்ட காட்சி அவனை திடுக்கிடச் செய்தது. நீண்ட தாடியுள்ள ஒரு ஆள் குகையிலிருந்து வெளியே வந்தான். அவனைக் கண்டதும் கேசவனின் முகம் பீதியால் வெளுத்தது.

''பயப்படாதே மகனே!'' என்ற அந்த உருவம் கேசவனை நோக்கி, ''உன்னையும், உன் தந்தையையும் மன்னனின் வீரர்களிடமிருந்து தப்பு விப்பது என் பொறுப்பு'' என்றது.

தன்னைப்பற்றி இவனுக்கு எப்படித் தெரிந்தது என்ற ஆச்சரியத்தில், கேசவனின் பயம் சிறிது விலகி, மனத்தில் நம்பிக்கை ஏற்பட்டது. தப்பியோடும் எண்ணத்தை அந்தக் கணமே கைவிட்ட கேசவன், அவனை உற்றுப் பார்த்தான்.

''ஏன் தயங்குகிறாய் மகனே! என்னுடைய வார்த்தைகளில் உனக்கு நம்பிக்கை ஏற்படவில்லையா? வா, உள்ளே வா!'' என்று அவன் அழைத் தான். கேசவன் தயங்குவதைக் கண்ட அந்த ஆள், ''என்னைக் கண்டு பயப் படுகிறாயா?'' என்று கேட்டான். அது கேசவனுக்கு சுருக்கென்று தைத்தது. ''பயமா? எனக்கென்ன பயம்? உன்னோடு எங்கு வேண்டுமானாலும் வரத் தயார். கையிலே வாளும், வில் அம்புகளும் வைத்திருக்கிறேன். யாரைக் கண்டும், எதைக் கண்டும் பயப்பட தேவையில்லை!'' என்று வீரம் பேசினான் கேசவன். தொடர்ந்து, ''என்னைப் பற்றியும், என் தந்தையைப் பற்றியும் உனக்கு எவ்வாறு தெரிய வந்தது என்று தான் நான் தயங்குகிறேன்!'' என்றான்.

''அப்படியானால் என்னுடன் இந்த குகைக்குள் வா! உன்னுடைய

சந்தேகங்களுக்கு தெளிவாக விளக்கம் கூறுகிறேன். இந்தக் குகையில் மகா சக்தி வாய்ந்த கால பைரவர் இருக்கிறார். அவருடைய கண்களை உற்று நோக்கினால், உலகத்தில் நடக்கும் அத்தனை விஷயங்களும் தெரியும்!'' என்று கூறினான்.

வியப்போடு ஆவலும் மேலிட, கேசவன் அவனைப் பின்தொடர்ந்தான். குகையின் உட்புறம் இருட்டாகவே இருந்தது. நீண்ட தூரம் குகைக்குள் சென்ற பின், ஓரிடத்தில் அந்த ஆள் நின்றான். குகையின் சு வரில் ஒ ரு பெ ரிய பயங்கரமான நாயின் உருவம் கல்லில் செதுக்கப்பட்டிருந்தது. அதனுடைய பெரிய கண்கள் சுடரொளி வீசி மின்னிக் கொண்டிருந்தன. அந்த நாயின் உருவைக் காட்டி, ''இதோ பார்! இதுதான் அந்த கால பைரவர். வழிபடுபவர்களுக்கு அவர் கண் கண்ட தெய்வம். சத்துருக்களுக்கு சமாதி கட்டுப வர். மிக மிக ச க்தி வாய்ந்தவர்! இதோ பார், நான் என்ன செய்கிறேன் என்று!'' என்று கூறிக் கொண்டே ஒரு மூலிகையினால் பைரவரின் கண்களைத் தொட்டான். ''அவருடைய கண்களைப் பார்! உன்னுடைய தந்தை அதோ தெரிகிறார் பார்! உன்னுடைய பசுக்கள் மேய்வதைப் பார்! அதோ, உன்னைப் பிடிக்க வரும் வீரர்களையும் பார்!'' என்று பலமாக சிரித்தான்.

கேசவன் அந்த அதிசயத்தைக் கண்டு கல்லாய் சமைந்து போனான். அவனுடைய தந்தை புதர்களுக்குள் ஒளிந்திருந்தார். குதிரையில் வந்த வீரர்கள் கேசவனைக் காணாமல் கேசவனுடைய பசுக்களைப் பிடிக்கப்



பார்த்தனர். மிரண்டு போன பசுக்கள் அங்குமிங்கும் தறி கெட்டு ஓடின. அதைக் கண்ட கேசவனை குற்ற உணர்வு வாட்டியது.

வீரர்கள் பசுக்களைப் பிடித்துச் சென்று விட்டால், அவன் தந்தை வருமானத்திற்கு வழியின்றி பட்டினி கிடப்பார். அவரை நிராதரவாக அங்கே விட்டுவிட்டு, தான் மட்டும் உயிருக்கு பயந்து தப்பியோடி வந்து விட்டதை நினைத்து, தன்மீதே அவனுக்கு கோபம் ஏற்பட்டது. கேசவனின் மனத்தில் நிழலாடிய எண்ணங்களை, அந்த ஆள் புரிந்து கொண்டான். ''கேசவா! உன் தந்தையைத் தனியாகத் தவிக்க விட்டு வந்து விட்டோமே என்று கவலைப்படுகிறாயா? நானிருக்க நீ ஏன் கவலைப்பட வேண்டும்? உன்தகப்பனையும், பசுக்களையும் பாதுகாக்க நான் ஒரு வழி செய்கிறேன்!'' என்றான்.

உடனே குகையை விட்டு வெளியே வந்த அந்த ஆள், ''சிஷ்யா, சிஷ்யா! நீ எங்கிருக்கிறாய்? நீ உடனே சென்று மன்னனுடைய வீரர்களைத் துரத்தி விட்டு, பசுக்களை பாது காப்பாய்!'' என்று யாருக்கோ உத்தர விட்டான். காலபைரவரின் முன் உட்கார்ந்து அவருடைய கண்களையே கவனித்துக் கொண்டிருந்த கேசவனுக்கு இப்போது ஒரு புதிய காட்சி தென் பட்டது. மாடுகளை மடக்கிப் பிடிக்க முயன்று கொண்டுஇருந்த வீரர்கள் முன், திடீரென ஒரு கரிய உருவம் தோன்றியது. ம னித மு கமும், வெளவால் போன்ற சிறகுகளும் கொண்ட அ ந்த உ ருவம் வ ானில் பறந்து கொண்டே இறங்கி வந்து வீரர்களைத் தாக்கிப் பந்தாடியது. அந்த வெளவால் மனிதனைக் கண்ட மாத்திரத்திலேயே, மன்னனுடைய வீரர்கள் பயந்து நடுங்கி நாற்புறமும் சிதறி ஓட ஆரம்பித்தனர்.

அதைக் கண்ட கேசவனுக்கு நிம்மதி உண்டாயிற்று. இனி தன் தந்தைக்கு அவர்களால் இடைஞ்சல் உண்டாகாது என்றும், தான் தற்போது சந்தித்த ஆள் தனக்கு பல விஷயங் களிலும் உ தவியாக இ ருப்பான் என்றும் நம்பிக்கை உண்டாயிற்று.

*(தொடரும்)*





நவீன
வேதாளக்
கதை

# தர்ம சிம்மாசனம்

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்திலேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழேயிறங்கி அதைத்தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில், அதனுள் இருந்த வேதாளம் சிரித்துக் கொண்டே, ''மன்னா! ஒரு நாட்டிற்கே அதிபதியான நீ உன்கடமையைப் புறக்கணித்துவிட்டு, ஒரு சாதாரண வேலைக்காரனைப் போல் நடந்து கொள்கிறாய்! நீ யார்? அபூர்வமானப் பொருளைப் பெறுவதற்காக நீ இப்படிச் செய்கிறாயா? அதைப் பெற்று விட்டால் மட்டும் போதாது, நன்கு பயன்படுத்தவும் தெரிய வேண்டும். இல்லை எனில் பிரணவகிரி



மன்னன் மயூரவர்மன் தனது மதியீத்தால் செய்த தவறுகளை நீயும் செய்யக்கூடும். அவன் கதையை உனக்குக் கூறுகிறேன், கேள்!'' என்று கதை சொல்லலாயிற்று.

இளவரசன் மயூரவர்மன் குரு குலத்தில் பயின்று தனது கல்வி கேள்விகளில் சிறப்பாகத் தேறிய பிறகு, அவனுடைய குரு அவனை நோக்கி, ''மயூரவர்மா! உனது குரு குலவாசம் இன்றோடு நிறைவு பெறட்டும். நீ உன் ராஜ்ஜியத்திற்குச் சென்று முடி சூடிக்கொள். ஒரு மன்னனுக்கு அன்றாட நிர்வாகத்தில் எத்தனையோ சிக்கல்களும், பிரச்சினைகளும் தோன்றக்கூடும். அந்த சமயங்களில், உனக்கு உதவியாக, உனக்கு ஒரு தாமிரத்தினாலான சிம்மாசனத்தை பரிசளிக்கிறேன். அது ஒரு தர்ம சிம்மாசனம். எந்த நபர் சம்பந்தமான பிரச்சினையைத் தீர்க்க வேண்டுமோ, அவரை அந்த சிம்மாசனத்தில் அமர்த்து! என்ன செய்ய வேண்டும் என்று சிம்மாசனமே தீர்ப்பு கூறும். அதன்படி நடந்து கொள்வாய்! உனக்கு என்று இது தேவையில்லை என்று தோன்றுகிறதோ, அன்று இதைத் திரு ப்பிக் கொடுத்து விடு!'' என்றார்.

அதை எடுத்துக் கொண்டு மயூரவர்மன் நாடு திரும்பினான். விரைவிலேயே அவன் மன்னனாக அரியணையில் ஏறினான். தர்ம சிம்மாசனத்தை தன்னுடைய சிம்மாசனத்திற்கு அருகிலேயே வைத்துக் கொண்டான். தீரமல்லன் என்ற கொள்ளைக்காரன் பல ஆண்டுகளாக ராஜ்ஜியத்தில் பல இடங்களில் கொள்ளையடித்து வந்தான். அவனை வளைத்துப் பிடிப்பது மிகவும் சிரமமாக இருந்தது. இறு தியில் ஒரு நாள் தீ ரமல்லன் பி டிப்பட்டான். ஆனால் அவனுக்கு எத்தகைய தண்டனை அளிக்கலாம் என்று யோசித்த மன்னன் தர்ம சிம்மாசனத்தின் உதவியை நாடினான்.

தீரமல்லன் தர்ம சிம்மாசனத்தில் அமர்ந்த உடனே ''இந்தக் கொள்ளைக்காரனுக்கு ஆயுள் தண்டனை விதிக்க வேண்டும்'' என்று ஒலித்தது.

இதற்கிடையில் அங்கு வந்த ஒற்றர் தலைவன், ''அரசே! தீரமல்லன் பல ஆண்டுகளாகக் கொள்ளை அடித்தவன் தான்! ஆனால் அவன் செல்வர்களை மட்டுமே கொள்ளை அடித்து இருக்கிறான். கொள்ளை

அடித்த பணத்தை தனக்கென்று வைத்துக் கொள்ளாமல், ஏழை களுக்குத் தந்து உதவியிருக்கிறான். தீரமல்லன் தனிப்பட்ட முறையில் நாணயமான, நேர்மையான மனிதன்'' என்ற அவன் மன்னரிடம் அதற்கு ஆதாரமான ஒரு கடிதத்தையும் கொடுத்தான்.

மன்னன் அதைப் படித்து விட்டு சற்று நேரம் யோசித்த பிறகு ''தீரமல்லனை இலஞ்ச ஒழிப்பு அதிகாரியாக நியமிக்கிறேன்!'' என்று தீர்ப்பு சொன்னான். தீர்ப்பைக் கேட்ட சபையோர்கள் திகைத்துப் போயினர்.

இந்த நிகழ்ச்சி நடந்து சில நாள்களில், மன்னனின் பிறந்தநாள் வந்தது. பிறந்தநாள் விழா கோலா கலமாகக் கொண்டாடப்பட்டது. விழாவையொட்டி பல போட்டிகள் வைக்கப்பட்டன. மற்ற போட்டிகளில் வெற்றி பெற்றவர்களை தேர்ந் தெடுத்தாகி விட்ட பின்னரும், வில்வித்தை போட்டியில் யார் வெற்றி பெற்றவர் என்று முடிவு செய்ய முடியவில்லை. ஏனெனில் அப்போட்டியில் பங்கு பெற்றவர் களில் மன்னனின் மைத்துனனான விஜயன் மற்றும் பழங்குடிஇனத்தைச் சேர்ந்த மாலி என்ற இரு இளைஞர் களும் மிகச் சிறப்பாக அம்பெய்தினர். இறுதிப் போட்டியில், நூறு கஜ தூரத்தில் ஒரு மரத்திலிருந்து ஒரு பொம்மை தொங்க விட்டு இரு இளைஞர்களையும் குறி தவறாமல் அம்பெய்யுமாறு கட்டளையிட்டனர். இருவருமே முதல் முறையிலேயே குறி தவறாமல் அம்பு எய்தி பொம்மையை அடித்து விட்டனர்.





வெற்றி பெற்றவன் யார் என்பதை தர்ம சிம்மாசனம் தீர்மானிக்கட்டும் என்று நினைத்த மயூரவர்மன், விஜயனை முதலில் அதில் அமரச் சொன்னான். உடனே சிம்மாசனம் ''வில்வித்தையில் வெற்றி பெற்றவனுக்கு வாழ்த்துகள்!'' என்று அறிவித்தது. சபையோர் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். ஆனால் மயூரவர்மன் மாலியையும் சிம்மாசனத்தில் அமரச் செய்தான். உடனே அது, ''வில்வித்தையில் வெற்றி பெற்றவனுக்கு வாழ்த்துகள்!'' என்று அறிவித்தது. சிம்மாசனத்தின் தீர்ப்பைக் கண்டு சபையோர்கள் குழப்பமுற்றனர்.

ஆனால் மன்னன் மயூரவர்மனோ சிரித்தபடி, பிறகு, ''இந்த வில் வித்தைப் போட்டியில் மாலியே வெற்றி பெற்றவனாகிறான்!'' என்று அறிவித்தார். மன்னனின் தீர்ப்பைக் கேட்ட சபையோர்கள் திகைத்துப் போயினர். பிறகு மன்னன் தனது மந்திரியிடம், ''இந்த தர்ம சிம்மாசனம் இனி தேவைப்படாது. இதை என் குருநாதரிடம் திருப்பி அனுப்பி விடுங்கள்!'' என்று கூறி விட்டுச் சென்று விட்டான்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''மன்னா! தாமிரத்தினால் ஆன சிம்மாசனம் கண்டிப்பாக மகிமை வாய்ந்தது என்பதில் சந்தேக மில்லை. ஆனால் மயூரவர்மன் கொள்ளைக்காரனான தீரமல்லனின் வீஷயத்தில் சிம்மாசனம் அளித்த தீர்ப்பிற்கு எதிராக இலஞ்ச ஒழிப்பு அதிகாரியாக நியமித்தான். அவன் முடிவு சரியானதா? அதேபோல் வில்வித்தைப் போட்டியிலும், தர்ம சிம்மாசனத்தின் தீர்ப்புப்படி விஜயன் மற்றும் மாலி இருவருமே தேர்ந்தவர் களாவர். ஆனால் மன்னனோ மாலியை வெற்றி பெற்றவன் என்று தீர்ப்பளித்தான். இதுவும் சரியான முடிவா? மன்னன் மயூரவர்மனின் இரண்டு தீர்ப்புகளுமே தவறானவை தான். தவிர, அவன் சிம்மாசனத்தை தனது குருவிடம் ஒப்படைக்குமாறு உத்தரவிட்டது மிகப் பெரிய தவறாகும். என் சந்தேகங்களுக்கு விடை தெரிந்தும் நீ சொல்லாமல் இருந்தால், உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்!'' என்றது.

உடனே விக்கிரமன், ''தர்ம சிம்மாசனம் மகிமை வாய்ந்தது

என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அதற்கென்று ஒரு எல்லை இருக்கிறது. இதை மயூரவர்மன் நன்கு அறிவான். தீரமல்லனின் விஷயத்தில் மன்னன் எடுத்த முடிவிற்குக் காரணம் ஒற்றர் தலைவனின் விளக்கமும் அவன் அளித்த கடிதமும்தான். அவை இரண்டும் மன்னனை யோசிக்க வைத்து விட்டது. மன்னன் அதன் மூலம் தீரமல்லன் சுயநலமில்லா தவன் என்றும் மக்களின் காவலன் என்றும் தெரிந்து கொண்டான். அதனால்தான் அவனை இலஞ்ச ஒழிப்பு அதிகாரியாக நியமித்தான். இவை மன்னனின் சிந்தித்து சுயமாக முடிவெடுக்கும் திறமையைக் காட்டுகிறது. வில்வித்தை போட்டி விஷயத்தில் சி ம்மாசனம் அ ளித்த தீர்ப்பு முற்றிலும் ஏற்றுக் கொள்ளாத வாறு இருந்தது. இரு இளைஞர்களும் அந்த நேரத்தில் காண்பித்த வித்தையை மட்டும் காரணமாக வைத்து சிம்மாசனம் தீர்ப்பளித்தது. விஜயன் ராஜ வம்சத்தைச் சேர்ந்தவன் ஆனால் மாலியோ பழங்குடியினத்தைச் சேர்ந்த காட்டுவாசி. வில்வித்தை கற்றுக் கொடுக்க அவனுக்கு குரு யாருமே கிடையாது. இருப்பினும் அவன் அதில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தான். அதை மனத்தில் கொண்டுதான் மன்னன் மாலியை வெற்றி பெற்றவனாக அறிவித்தான். தர்மம் மற்றும் அதர்மத்தைப் பற்றி தீர ஆலோசித்து முடிவெடுப்பதில் மனிதனின் மூளைக்கு நிகர் அதுதான். வேறு எதுவும் கிடையாது. மன்னனுக்கு அவனது விவேகத்தின் மீதும், உலக நடப்பு குறித்த அறிவு மீதும் அபார நம்பிக்கை இருந்தது. அதனால்தான் அவன் தர்ம சிம்மாசனத்தின் தீர்ப்பை அமுல் படுத்தவில்லை. இதனால்தான் அவன் சிம்மாசனத்தை தனது குருவிடம் திருப்பி கொடுத்து விடும் படி உத்தர விட்டான். அவனது இந்த முடிவு மிகவும் சரியானதே!'' என்றான்.

விக்கிரமனின் இந்த சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, வேதாளம் மீண்டும் பறந்து சென்று தான் சுமந்து வந்த உடலுடன் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.



# மேகங்களைத் தொட்ட மூக்கு

ஜப்பானில் ஒரு ஏரி இருக்கிறது. அது ஒரு அதிசயமான ஏரி. அதிசயம் என்றால், அதிலுள்ள மீன்கள் மிக அதிசயமானவை. அவ்வளவு பெரிய குடமிளகாய் மூக்குள்ள மீன்களை நீங்கள் வேறு எங்கும் பார்த்திருக்க முடியாது. அதிருக்கட்டும்! அங்குள்ள மீன்களின் மூக்குகள் ஏன் அவ்வளவு பெரிதாக இருக்கின்றன தெரியுமா? அதற்கு ஒரு கதையே இருக்கிறது.

ஒரு சமயம் ஜப்பானில் உள்ள கிராமத்தில் ஒரு மேளக்காரன் இருந்தான். அந்த கிராமத்தில் நடக்கும் எல்லா விசேஷங்களுக்கும் அவன்தான் மேளம் அடிப்பான். மிகவும் ஏழையான அவன் வீடு ஒருமுறை நிலநடுக்கத்தில் இடிந்து போய் விட்டது. புதிய வீடு கட்ட அவனிடம் பணம் இல்லாததால், ஊர் எல்லையில் இருந்த மலைக் குகையில் வசிக்கத் தொடங்கினான். மலைக்குகைக்கு அருகிலேயே ஓர் ஏரி இருந்தது. முதுமையின் காரணமாக அவனால் மேளம் வாசிக்க முடியாமல் போயிற்று. வருமானத்திற்கு வழியின்றி பட்டினி கிடக்க ஆரம்பித்தான். அவன் மீது பரிதாபப்பட்ட கிராமத்தினர் அவனுக்கு உனவளித்து வந்தனர்.



ஒருநாள் கிராமத்து சிறுவன் ஒருவன் கிழவனின் நிலையைக் கண்டு இரக்கப் பட்டு, உணவு அளித்தான். அவனை நன்றியறிதலுடன் நோக்கி, ''மகனே! நான் இறக்குமுன் நீ செய்த உதவிக்கு ஒரு பரிசு தர விரும்புகிறேன். இந்த மேளத்தை என் உடன் பிறப்பைப் போல் பராமரித்து வந்ததால், அது எனக்கு ஒரு வரத்தை அளித்திருக்கிறது. இதை நான் தட்டிக் கொண்டே, யாருடைய மூக்கையாவது பார்த்து 'பெரிதாகு' என்றால், அவருடைய மூக்கு பெரிதாக வளரும். 'சிறிதாகு' என்றால் அளவில் சிறிதாகி விடும். நிறைய மனிதர்களுக்கு முகத்திற்குத் தகுந்த மாதிரி மூக்கு அமைவதில்லை. அவர்கள் தங்களுடைய மூக்கைப் பெரிதாகவோ, சிறிதாகவோ ஆக்கிக் கொள்ள விரும்பினால், இந்த மேளத்தின் உதவியால் அது சாத்தியமாகும்.

இதைக் கொண்டு, உன் வருமானத்திற்கு வழி தேடு. ஜாக்கிரதை, இதில் வேடிக்கையாக விளையாட மட்டும் எண்ணாதே! பிறகு விபரீதமாகி விடும்! நான் இறந்ததும், எனக்கு ஈ மக்கிரியைகளை செய்வாயாக!'' என்றான்.



சிறிது நேரத்தில் அவன் இறந்து விட்டான். சிறுவனும் கிழவனின் ஈமக்கிரியைகளை செய்து முடித்தான்.

சிறுவனின் வீட்டு சொந்தக்காரரின் மகளுடைய மூக்கு மிகவும் சிறிதாக இருந்தது. மேளத்தின் உதவி கொண்டு, அவன் அவளுடைய மூக்கைப் பெரிதாக்கினான். அன்றுமுதல், அவன் புகழ் எங்கும் பரவியது. தங்களுடைய மூக்கின் அளவை பெரிதாக்கவோ அல்லது சிறிதாக்கவோ, பலர் அவனைத் தேடி வந்தனர். இதனால் அவனுக்கு ஏராளமான வருமானம் கிடைத்தன.

இவ்வாறு இரண்டு ஆண்டுகள் கழிந்தன. சிறுவன் இப்போது மிகவும் பணக்காரனாகி விட்டான். ஒருநாள் அவன் ஏரிக்கரையில் உலவிக் கொண்டு இருக்கையில் மேளத்தின் உதவியால் மூக்கு எத்தனை பெரிதாக வளரமுடியும் என்று சோதித்துப் பார்க்கும் விபரீத ஆசை அவனுக்கு ஏற்பட்டது. உடனே அவன் தன் மூக்கைப் பார்த்துக் கொண்டே 'பெரிதாகு!' என்று சொல்லிக் கொண்டே, மேளத்தைத் தட்டினான். அவனுடைய மூக்கு மிக மிகப் பெரிதாக வளர்ந்து வானிலுள்ள மேகங்களையே தொட்டு விட்டது.

திடீரென வானில் பறந்து கொண்டிருந்த கழுகு ஒன்று அவன் முக்கின் மீது அமர்ந்து, அதை கொத்தத் தொடங்கியது. ''ஆ! ஐயோ!'' என்று கத்திக் கொண்டே, 'சிறிதாகு', 'சிறிதாகு' என்று மேளத்தைத் தட்டிக் கொண்டே கூவினான். அதற்குள் கழுகு அவன் மூக்கினைப் பற்றிக் கொண்டு பறக்க ஆரம்பிக்க, அவனும் சேர்ந்து பறந்தான். அதற்குள் மூக்கு சிறிது சிறிதாக, கழுகு அப்போதுதான் அவனைப் பார்த்தது. பயந்து போன கழுகு அவனை அலகில்இருந்து நழுவ விட்டது. மேளக்கார சிறுவன் தடாலென்று ஏரியில் விழுந்தான்.

விழுந்த சிறிது நேரத்தில் அவன் ஒரு மீனாக மாறி விட்டான். மீனுடைய மூக்கு மட்டும் பெரிதாக இருந்தது. மேளக்கார கிழவன் விடுத்த எச்சரிக்கையை மறந்து மேளத்தின் சக்தியுடன் விளையாடியதால் வந்த வினை அது!

# செய்திச்சுடர்

## புதிய சிவன் கோயில்



**வா**ரணாசியில் சிவராத்திரி அன்று ஒரு புதிய சிவன் கோயிலின் திறப்பு விழா நடை பெற்றது. அங்குள்ள இறைவனின் திருநாமம் ருத்ரேஸ்வர் மகாதேவ். அந்தக் கோயிலை உருவாக்க நன்கொடை அளித்தவர்களில், பெரும்பாலான தொகையை அளித்தவர் ஒரு முஸ்லிம் பெண்மணி ஆகும். வ ழக்கறிஞரான நூர் ஃபாத்திமா சென்ற ஆண்டு ஒரு கனவில் தான் கங்கேஷ்பூர் எனுமிடத்தில் சிவன் கோயில் ஒன்றை அமைப்பதாகக் கண்டார். மறுநாள் அதை செயற்படுத்த தனது சேமிப்புத் தொகையிலிருந்து பெரும் பகுதியை இக்கோயிலுக்காகக் கொடுத்து விட்டார். இக்கோயிலைக் கட்டுவதற்கு இந்துக்கள் மட்டுமன்றி முஸ்லிம்களும் நன்கொடை அளித்துள்ளனர்.

## பாரம்பரிய மரம்



**ஆ**ந்திர அரசு அனந்தப்பூர் மாவட்டத்தில் உள்ள குடிபயலு என்ற கிராமத்தில் உள்ள 550 ஆண்டுகள் வயதான திம்மம்மா மரி மானு என்ற ஓர் ஆல மரத்தைப் பராமரிப்பதற்காக பத்து ல ட்சம் தொகையையும் ஒ துக்க தீ ர்மானித்துள்ளது. தி ம்மம்மா எ ன்ற பெண்மணியின் பிரார்த்தனை அவள் கணவனின் உயிரைக் காத்தது. ஆலமரத்திற்கும் அவளுடைய பெயரே சூட்டப்பட்டது. இந்த ஆலமரம் 1989ஆம் ஆண்டு கின்னஸ் உலக சாதனையிலும் இடம் பெற்று விட்டது. இதைக் காண மாநிலத்தின் பல பாகங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான பெண்கள் வருகின்றனர். 2.1 ஹெக்டேர் நிலப்பரப்பில் பரந்து வளர்ந்துள்ள, இந்த ஆலமரத்திற்கு 1,200 கிளைகள் உள்ளன.



# வீட்டின் மீது பற்று

ஒரு கிராமத்தில் அன்னபூரணி என்ற கிழவி வசித்து வந்தாள். அவளுடைய கணவர் இறந்த பிறகு, தன்னுடைய வீட்டில் தனியாகக் காலம் கழித்து வந்தாள். திருமணமான அவளுடைய ஒரே மகள் நகரத்தில் வசித்து வந்தாள். வீட்டிற்குள் இருந்தால் தனிமை அதிகமாக தோன்றியதால், தோட்டத்தில் ஒரு மாமரத்தின் அடியில் கட்டிலைப் போட்டுக் கொண்டு அதில் படுத்துக் கொண்டே காலத்தைக் கழித்தாள்.

ஒரு நாள் நண்பகல் நேரம் அவள் அவ்வாறு கட்டிலில் படுத்துக் கொண்டு கடந்த காலக் கனவுகளில் மூழ்கிருக்கையில், திடீரென மா மரத்தில் ஒரு மயில் வந்து அமர்ந்தது. அவள் எழுந்து உட்கார்ந்ததும், மயில் அவளைக் கண்டு பறந்து ஓட வில்லை. காரணமறிய உற்று நோக்கியபோது, மயிலின் காலில் அடிபட்டு காயம்பட்டிருந்தது தெரிந்தது. உடனே அவள் இரக்கப் பட்டு மயிலை அழைக்க, அதுவும் சாதுவாக அவளிடம் வந்தது. மயிலை வீட்டிற்குள்ளே எடுத்துச் சென்று, அதன் காயத்திற்கு மருந்து தடவிக் கட்டுப் போட்டாள். பிறகு அது தின்பதற்குச் சில பழங்களைக் கொடுத்தாள்.

அப்போது யாரோ கதவைத் தட்டும் ஒலி கேட்டது. வாயிலுக்குச் சென்று பார்க்க, ஒரு முரடன் நின்று கொண்டிருந்தான். ''ஏய் கிழவி, ஒரு மயில் பறந்து உன் தோட்டத்திற்குள் வந்ததே! அது எங்கே? '' என்று கேட்டான். அப்போதுதான் கிழவிக்கு அந்த முரடன் மயிலை வேட்டை யாட முயற்சித்தவன் என்றும், அந்த முயற்சியில் மயிலுக்குக் காலில் அடிபட்டு விட்டது என்றும் தெரிந்து கொண்டாள்.

''மயிலா? நான் அப்படி எதையும் பார்க்கவில்லையே!'' என்று அவனை

செந்தில் குமார்



அனுப்பி விட்டாள். அன்று முதல், மயிலின் காயத்திற்கு தினமும் கட்டு போட்டு, அதற்கு உண்ண கொடுத்து, அன்புடன் அதைப் பராமரிக்கத் தொடங்கினாள். சில நாள்களில் மயில் கிழவியின் செல்ல பறவையாகி விட்டது. கிழவிக்கும் தனிமைத் துயரம் நீங்கி, பொழுது மகிழ்ச்சியுடன் கழிந்தது.

கிழவி வீட்டில் மயில் வளர்க்கும் செய்தி அந்த ஊர் ஜமீன்தாரின் செவிகளை எட்டியது. உடனே அவர் அவள் வீட்டிற்கே வந்து விட்டார். ''அன்னபூரணி! மயில் வளர்க்க வேண்டுமென்று எனக்கு மிகவும் ஆசை! ஆனால் இதுவரையில் எனக்கு மயில் கிடைக்கவேயில்லை. நீ என்ன விலை கேட்டாலும் நான் கொடுக்கத் தயார்! உன் மயிலை எனக்குக் கொடுத்து விடு!'' என்றார்.

திடுக்கிட்ட அன்னபூரணி, ''இதை நான் என்னுடைய குழந்தையாக பாவிக்கிறேன். தாயிடமிருந்து மகனைப் பிரிக்க நீங்கள் நினைக்கலாமா? '' என்றாள். ஜமீன்தார் பேசாமல் திரும்பிச் சென்று விட்டார்.

ஆனால் ஒரு மாதம் கழித்து மீண்டும் அவளைத் தேடி வந்த ஜமீன்தார். ''நீ எப்போதாவது இந்த கிராமத்தை விட்டுப் பிரிய நேர்ந்தால், உன் மயிலை என்ன செய்வாய்? '' என்று கேட்டார்.

''நல்ல கேள்வி கேட்டீர்கள்? நான் இதைப் பிரிந்து எங்கும் செல்லுவதாயில்லை!'' என்றாள் கிழவி. ஆனால் ஜமீன்தார் விடுவதாயில்லை. ''பேசாமல் நீ உன் மயிலுடன் என் வீட்டிற்கு வந்துவிடு. நீயும், மயிலும் என் வீட்டிலேயே தங்கலாம்!'' என்று சொல்லிப் பார்த்தார்.

கிழவி அதைக் கேட்டதும் மிகுந்த உற்சாகமடைந்தாள். ஜமீன்தார் சொல்வது போல் செய்யத் தோன்றியது. ஆனால் சிறிது நேரம் யோசித்த பிறகு, அவளுக்கு தன்னுடைய வீட்டை விட்டுச் செல்வது சரியல்ல எனத் தோன்றியது.

''தயக்கம் வேண்டாம் அன்னபூரணி! என்னுடைய வீட்டிற்கு வந்தால், வசதியாக வாழலாம்!'' என்று மேலும் ஜமீன்தார் தூண்டினார்.

''இல்லை ஐயா! இது என் கணவர் குடியிருந்த கோயில். இதை விட்டு நான் எங்கும் வர விரும்பவில்லை!'' என்றாள் கிழவி.

கிழவியின் வீட்டின் மீதுள்ள

பற்றும், மயிலைத் தன் குழந்தையாக பாவிக்கும் அவளுடைய தாய்மை உள்ளத்தையும் கண்ட ஜமீன்தார் நெகிழ்ந்து போனார். அதற்கு மேலும் அவளை வற்புறுத்த விரும்பாதவராக ''சரியம்மா! உன் வீட்டின் மீது நீ இவ்வளவு பற்றுதல் வைத்திருக்கிறாய்! இதை விட்டு நீ வர வேண்டாம். உன் வீட்டைச் சுற்றிலும் இன்னும் மலர்ச் செடிகளையும், பழ மரங்களையும் வளர்க்கச் செய்து, சோலையாக மாற்றுகிறேன். நீயும், மயிலும் உல்லாசமாகக் காலம் கழியுங்கள்!'' என்று சொல்லி விட்டுப் போனார். அவர் வாக்களித்த வாறே, அவருடைய தோட்டக்காரர்கள் கிழவியின் தோட்டத்தை சோலையாக மாற்றி விட்டார்கள்.

ஒருநாள் கிழவி தன் மயிலுடன் தோட்டத்தில் பொழுது போக்கிக் கொண்டிருக்கையில், மயிலுக்கு உணவளிக்கும் நேரம் வந்து விட்டது. சமையல் அறையிலிருந்து தானியங்களை எடுத்துக் கொண்டு, தோட்டத்திற்குச் சென்ற கிழவி, அங்கே ஒரு சிறுவனைப் பார்த்தாள். அந்தச் சிறுவன், ''பாட்டி, நான் இனிமேல் தானியம் சாப்பிட மாட்டேன். நீ சாப்பிடும் அதே உணவை எனக்குக் கொடு!'' என்றாள். கிழவிக்குத் தூக்கி வாரிப்போட்டது. ''டேய் பையா! யார் நீ? என் மயில் எங்கே?'' என்று கலவரத்துடன் கேட்டாள்.

''பாட்டி! நான்தான் அந்த மயில்! மயில்தான் நான்!'' என்று புதிர் போட்டான். கிழவி ஒன்றும்



புரியாமல் விழித்தாள். சிறுவன் தொடர்ந்து, ''பாட்டி ஒரு முனிவரின் சாபத்தினால், நான் மயிலாக மாறினேன். இப்போது சாப விமோசனம் பெற்று பையனாக மாறி விட்டேன். நீ நம்பவில்லையானால், மயிலாயிருந்தபோது என் காலில் பட்ட காயத்தின் தழும்பைப் பார்! இப்போதும் அதே காலில் தழும்பு இருக்கிறது!'' என்று காட்டினான். அப்போதும் கிழவிக்கு மர்மமாக இருந்தது.

சிறுவன் மீண்டும் தொடர்ந்து, ''பாட்டி! என் பூர்வீகக் கதையை கூறுகிறேன், கேள்! நான் ஒரு அனாதைச் சிறுவன். ஒரு விவசாயியின் வளர்ப்பு மகனாக வாழ்ந்தேன். சிறு வயதில் மாடு மேய்த்து வந்தேன். அப்போதிலிருந்தே, எனக்கு மயில்கள் மீது மிகவும் ஆசை. எப்படியேனும்

ஒரு மயிலைப் பிடித்து வளர்க்க வேண்டுமென்று, மயில்களைத் துரத்தி துரத்திப் பிடிக்கப் பார்த்துண்டு. ஆனால் ஒரு மயிலும் என் கைகளில் சிக்கவில்லை. ஒ ருநாள் ஒ ரு மயிலைத் துரத்திக் கொண்டே சென்று ஓடினேன். அப்படியும் அந்த மயில் என் கைகளில் சிக்கவில்லை. மோகம் கொண்ட நான் அதன் மீது ஒரு கல்லைத் தூக்கி எறிய, அது தவம் செய்து கொண்டிருந்த ஒரு முனிவரின் மீது பட்டது. அவர் கோபமடைந்து என்னை மயிலாக மாறுமாறு சாபமிட்டார். நான் அவரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட பிறகு, உயிரினங்களின் மீது ஜீவகாருண்யமும் அன்பும் காட்டும் ஒருத்தி மூலமாக எனக்கு சாபவிமோனம் கிடைக்கும் என்றார். அந்த ஒருத்தியாக நீங்கள் எனக்குக் கிடைத்தீர்கள்'' என்றான்.

அவன் சொன்னதைக் கேட்டு மிகவும் மகிழ்ந்த கிழவி அவனை அன்புடன் அணைத்துக் கொண்டாள். பிறகு, ''குழந்தை! மயில் வளர்க்க வேண்டுமென்று ஜமீன்தார் மிகவும் ஆசைப்பட்டார். என்னிடம் நீ மயிலாக இருந்தபோது, உனக்காகவே என்னுடைய சாதாரணத் தோட்டத்தை நந்தவனமாக மாற்றினார். நீ மனிதனாக மாறியதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி. ஆனால் அவர் ஏமாற்றமடைவார்!'' என்றாள்.

''கவலைப்படாதே! நான் ஒருவன் இருந்த இடத்தில், இப்போது பல மயில்களை இங்கே வரவழைத்து வசிக்கச் செய்கிறேன். நான் மயிலாக இருந்தபோது, பல மயில்கள் எனக்குத் தோழர்களாக இருந்தனர். அவர்களை இங்கே வரவழைக் கிறேன்!'' என்று கூறி மயிலைப் போல் அகவ, பல மயில்கள் அங்கே பறந்து வந்தன.

தங்களது ப ழைய ே தாழனை அடையாளம் கண்டு கொண்டு, அவை மகிழ்ச்சியுடன் அவர் களுடைய தோட்டத்தில் வசிக்க ஆரம்பித்தன. அந்தக் காட்சியைக் கண்டால், ஜமீன்தார் மிகவும் மகிழ்ச்சி அடைவார் என்று கிழவியும் திருப்தி அடைந்தாள்.



# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:



சங்கரன் பெரிய பணக்காரன். ஆனால் சரியான கருமி. திருமணம் கூட செய்யாமல் தனது முன்னோர்கள் வசித்து வந்த வீட்டில் தனியாகவே காலம் கழித்தான். ஒருநாள் அவன் இறந்து போய், ஆவியாகி அந்த வீட்டிலேயே உலவி வரலானான்.

ஆவியான பிறகும் கூட, தன் வீட்டிற்குள் வர யாரையும் அனுமதிக்கவில்லை. ஆவி நடமாடும் வீடு என்பதால் யாரும் அவன் வீட்டிற்கு வருவதே கிடையாது. ஆனால் ராமு என்ற ஏழை தைரியமாக அந்த வீட்டில் குடியேறினான். சங்கரனுடைய ஆவிக்கு, தன் வீட்டில் இவ்வாறு ஒருவன் அத்துமீறி நுழைந்து வசிப்பது கோபத்தை உண்டாக்கியது. ராமுவை அங்கிருந்து துரத்த எண்ணிய ஆவி, அவன் வெளியில் வரும்போது அவன் மீது கற்களை வீசி எறிந்தது. வீட்டிற்குள் அவன் இருக்கும் சமயத்திலும், உறங்கும் சமயத்திலும் கூட கற்களை வீசியெறிந்தது. ஆனால் ராமு வீட்டை விட்டுச் செல்வதாக இல்லை. ஆவி செய்யும் தொந்தரவுகளை தனக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள ராமு ஒரு திட்டம் வகுத்தான்.

மீதிக் கதையை 100 முதல் 150 சொற்களுக்குள் வருமாறு எழுதி, கதைக்கு ஒரு பொருத்தமான தலைப்பு கொடுங்கள். உங்களுடைய மீதிக் கதையை ஓர் உறையிலிட்டு, உறையில் 'வாசகர் கதைப் போட்டி' என்று குறிப்பிட்டு, கீழ்க்காணும் கூப்பனுடன் இணைத்து அனுப்புங்கள்.

## முடிவு தேதி : டிசம்பர் 31, 2005

பெயர் ----------------------------------வயது-----------பிறந்த தேதி----------------

பள்ளியின் பெயர் ------------------------------------------------------------------------

வகுப்பு------------------------------வீட்டு முகவரி-------------------------------------

-------------------------------------------------------------------------------------------

------------------------------------------------------------------பின்கோடு------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

## சந்தமாமா இந்தியா லிமிடெட்

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.

குஜராத் மாநிலத்து நாட்டுப்புறக் கதை

# நல்லவன் யார், கெட்டவன் யார்?

அஹ்வா என்ற கிராமத்தில் நந்தன் என்ற ஏழை பிராமணன் வசித்து வந்தான். கல்வியறிவு இல்லாத அவனுக்கு, வேலை எதுவும் கிடைக்காததால் பிச்சையெடுக்க ஆரம்பித்தான். கிராமத்துத் தெருக்களில் வீடு வீடாகச் சென்று பிச்சையெடுத்து, அதில் கிடைக்கும் அரிசியை வீட்டிற்குக் கொண்டு வருவான். பணமாகக் கிடைத்தால், அதில் காய்கறிகள் வாங்கி வருவான். அவன் மனைவி லட்சுமி பிச்சையில் கிடைத்த அரிசியை சமைத்து தன் நான்கு குழந்தைகளுக்கு அளிப்பாள். குழந்தைகள் உண்டபின், மிஞ்சியதை



நந்தனும் லட்சுமியும் சாப்பிடுவார்கள். எதுவும் மிஞ்சவில்லையெனில், தண்ணீரைக் குடித்து வயிறை நிரப்பிக் கொள்வார்கள்.

இப்படியாக அரை வயிறு, கால் வயிறு உண்டு மிகவும் சிரமத்துடன் நாள்களைக் கழிக்கையில் லட்சுமி ஒருநாள், ''இன்னும் எத்தனை நாள் தான் நாம் இவ்வாறு காலம் தள்ளுவோம். பணம், காசு கிடைக்க நீ வேறு ஏதாவது வழி செய்யக் கூடாதா?'' என்றாள்.

''என்ன செய்வது என்று எனக்குப் புரியவில்லை லட்சுமி. உனக்கு ஏதேனும் தெரிந்தால் சொல்லேன்'' என்றான் நந்தன்.

''நீ ஏன் நம் மன்னரைச் சென்று சந்திக்கக் கூடாது? அவர் உனக்கு ஏதாவது கொடுப்பார்'' என்றாள்.

''அதிருக்கட்டும்! மன்னர் ஏதாவது தானம் செய்தால், நான் பதிலுக்கு எவ்வாறு ஆசீர்வாதம் செய்வது?'' என்று நந்தன் கேட்டான்.

அதற்கு லட்சுமி, ''அப்போதைக்கு உனக்கு என்ன தோன்றுகிறதோ, அதைச் சொல்'' என்றாள்.

அடுத்த நாள் காலை, நந்தன் அரண்மனைக்குச் சென்றான். மன்னர் முன் சென்றவுடன் நந்தன் தன்னுடைய சோகக் கதையை அவருக்கு எடுத்து

உரைத்தான். ''உனக்கு என்ன வேண்டும், கேள்!'' என்றார் மன்னர்.

''ஏதாவது தானம் செய்யுங்கள், அரசே! நீங்கள் எது தந்தாலும் சரி!'' என்றவன் பிறகு தன் வலது கையை உயர்த்தி, ''நல்லவை நல்லவையாகவே இருக்கும். மோசமானது மோசமாகவே இருக்கும்!'' என்று ஆசீர்வாதம் செய்தான். மன்னர் சிரித்து விட்டு, ஒரு துண்டு காகிதத்தில் ஏதோ எழுதி, ''இதை கணக்குப் பிள்ளையிடம் கொடு!'' என்றார்.

நந்தன் மகிழ்ச்சியுடன் அந்த சீட்டை எடுத்துச் சென்று கணக்குப் பிள்ளையிடம் தர அவர் அதில் உள்ளதைப் படித்து விட்டு ஒரு வெள்ளிக்காசு தந்தார். நந்தன் அதைப் பெற்றுக் கொண்டு, கடைக்குச் சென்று நிறைய பொருட்கள் வாங்கி வீடு சென்றான். பல நாள்களுக்குப் பிறகு, அன்று நந்தனின் குடும்பத்தினர் வயிராற உண்டனர்.

மறுநாளும் நந்தன் மன்னரிடம் சென்று, முந்தைய தினம் போல் ஆசீர்வாதம் செய்ய அவரும் ஒரு சீட்டு எழுதிக் கொடுக்க, அன்றும் அவனுக்கு வெள்ளிக்காசு கிடைத்து. இவ்வாறு மூன்று நான்கு தினங்களாக நடைபெற்றது. இதைக் கண்ட அரண்மனைக் காவலன் ஒருவனுக்கு நந்தனின் நடவடிக்கைகளில் ஆர்வம் ஏற்பட்டு அந்தப் பணத்தில் தானும் பங்கு பெற வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது.

மறுநாள் வழக்கம்போல் நந்தன் கணக்குப்பிள்ளையிடம் ஒரு



வெள்ளிக்காசு பெற்றுக் கொண்டதும், வழியிலேயே அவனைக் காவலன் மடக்கினான். ''என்னப்பா, தினமும் தானம் வாங்கிக் கொண்டு போகிறாய். ஆனால் உன்னை அரண்மனைக்குள் இலவசமாக விடும் எனக்கு ஏதேனும்...!'' என்று முடிப்பதற்குள் நந்தன் அங்கிருந்து ஓடி விட்டான். தன்னை ஏமாற்றிவிட்டு ஓடிய நந்தனின் மேல் காவலனுக்கு கடும் கோபம் ஏற்பட்டது. 'என்னையா ஏமாற்றுகிறாய்! உனக்கு வைக்கிறேன் வேட்டு!' என்று எண்ணிக் கொண்டான்.

மறுநாள் நந்தனின் வருகைக்காக அவன் காத்திருந்தான். வழக்கப்படி நந்தன் கணக்குப்பிள்ளையிடம் பணம் வாங்கிக் கொண்டு வரும்



போது, காவலன் அவனை மீண்டும் வழியிலே மடக்கினான்.

''சற்று நில்லப்பா! நேற்று மன்னருக்கு உன் மேல் கோபம் ஏற்பட்டு விட்டது. அதைத்தான் உனக்கு சொல்ல வந்தேன்!'' என்றான் காவலன். மன்னர் கோபம் அடையும் படி தவறுதலாகத் தான் எதுவும் செய்யவில்லையே என்று நந்தன் குழம்பினான். பிறகு காவலனை நோக்கி, ''மன்னர் ஏன் என் மீது கோபம் அடைய வேண்டும்?'' என்று கேட்டான். ''அதுவா! நீ மன்னருக்கு தினமும் வாழ்த்து தெரிவிக்கும்போது, உன் வாயிலிருந்து ஒரு துர்நாற்றம் வீசுகிறதாம்! இதை நேற்று மன்னர் என்னிடம் சொன்னார்'' என்றான்.

நந்தனுக்கு பயத்தினால் உடல் வெலவெலத்தது. சிறிது நேரத்திற்குப் பின் ''சரி நீ சொன்னது நல்லதாயிற்று. நான் நாளை முதல் என் வாயை ஒரு துணியால் மூடிக் கொண்டு வருகிறேன். அப்போது என் வாயில் இருந்து வரும் நாற்றம் அவர் மீது அடிக்காது'' என்று நந்தன் கூறிவிட்டு அங்கிருந்து சென்று விட்டான்.

மறுநாள் நந்தன் துணியினால் வாயைக் கட்டிக் கொண்டு மன்னரிடம் தானம் கேட்டு, பிறகு வாழ்த்தவும் செய்தான். ஆனால் அன்று காவலன் நந்தனை தேடி வரவில்லை. அன்றிரவு அதே காவலன் மன்னரிடம் சென்று, ''உங்களிடம் தினமும் நந்தன் எனும் அந்தணன் தானம் கேட்டுச் செல்கிறானே, அவன் திமிர் பிடித்தவன் மகாராஜா!'' என்றான்.

அதன் பிறகு ''மகாராஜா இன்று அவன் துணியினால் வாயையும், மூக்கையும் கட்டிக் கொண்டு வந்தானே, பார்த்தீர்களா? என்று கேட்டான். ''ஆமாம். அவனுக்கு பல்வலியாக இருக்கலாம்'' என்றார் மன்னர். ''இல்லை மகாராஜா,'' என்ற காவலன் தொடர்ந்து ''நான் அவனிடம் அதற்கான காரணத்தைக் கேட்டேன். அதற்கு அவன் என்ன கூறினான் தெரியுமா? அவன் உங்கள் காதருகே வந்து ஆசீர்வதிக்கும் போது, தினமும்

உங்கள் காதிலிருந்து துர்நாற்றம் வீசுகிறதாம்,'' என்றான். இதைக் கேட்டதும் ''ஆகா! இப்போது புரிகிறது. 'நல்லவை நல்லவையாக இருக்கும், மோசமானவை மோசமாகவே இருக்கும்' என்று கூறுகிறானே, அதன் பொருள் இது தானா? '' என்றார் வெகுண்டு போன மன்னர்.

மறுநாள் நந்தன் மன்னரிடம் வழக்கப்படி தானம் கேட்க, மன்னரும் சீட்டு கொடுத்தார். அதை எடுத்துக் கொண்டு வந்த நந்தனை காவலன் வழி மறித்து, ''அட! இன்றைக்கும் உனக்கு தானம் கிடைக்குமா? ஆச்சரியமாக இருக்கிறதே!'' என்றான். நந்தன் உடனே அவனிடம், ''தக்க சமயத்தில் அறிவுரை தந்து காப்பாற்றிய நண்பன் நீ! அதனால் இந்த சீட்டை நீ இன்று எடுத்துப்போய், பணத்தை வாங்கிக் கொள்'' என்று சொல்லி விட்டு சீட்டை காவலனிடம் கொடுத்து விட்டான்.

'பலே! அதிருஷ்டம் தான் நமக்கு' என்று எண்ணிய காவலன் மகிழ்ச்சியுடன் அந்த சீட்டை கணக்குப் பிள்ளையிடம் காட்டினான். அவனை ஆச்சரியத்துடன் பார்த்த கணக்குப் பிள்ளை, உள்ளே கை தட்டி ஆட்களுக்கு சைகை செய்தார். உடனே சில ஆட்கள் வந்து, காவலனை அமுக்கிப் பிடித்து, அவன் காதுகளையும், மூக்கையும் வெட்டி விட்டனர் அலறித்துடித்த காவலன் நேராக மன்னரிடம் சென்று புகார் செய்தான்.

''அட! அந்தச் சீட்டு உன் கைக்கு எப்படி வந்தது? நந்தனின் மூக்கையும், காதுகளையும் அல்லவா வெட்டச் சொல்லி எழுதியிருந்தேன்!'' என்றார் மன்னர்.

''நான் அவனுடைய தானத்தில் லஞ்சம் கேட்டேன்! அவன் நீங்கள் எழுதிக் கொடுத்த சீட்டைக் கொடுத்தான்'' என்ற காவலன் நடந்த உண்மையை ஒப்புக் கொண்டான்.

''உத்தமனான நந்தனின் மீது உன்னுடைய பேராசையாலும், தீய எண்ணத்தாலும் வீண் பழி சுமத்தினாய் அல்லவா! அதற்கு கிடைத்த தண்டனைதான் இது!'' என்று மன்னர் காவலனைக் கடிந்து கொண்டார்.






# கடைசியாகக் கொண்டாடிய ஹோலி



குஜராத்தில் உள்ள தோம்கேடி என்ற இடத்தில் வசித்து வந்த பழங்குடி மக்கள் இந்த ஆண்டு கொண்டாடிய ஹோலிப் பண்டிகை அவர்களுடைய கடைசிப் பண்டிகையாக முடிந்தது. மறுநாளே அவர்கள் இருப்பிடங்களை நர்மதை நதி விழுங்கியது.

பண்டிகைக்கு ஒருநாள் முன்பாக, நர்மதையில் வெள்ளம் குறைவாகத்தான் இருந்தது. பழங்குடி மக்கள் அண்டை மாநிலமான மத்திய பிரதேசத்திலுள்ள ஜாம்புவா மாவட்டத்தில் ஜலசிந்தி என்ற இடத்தில் பண்டிகை கொண்டாடிவிட்டு அன்றுதான் தங்கள் ஊருக்குத் திரும்பியிருந்தனர். அவர்களுடன் கூடவே, நர்மதை அணை கட்டுத் திட்டத்தை எதிர்த்துப் போராடி வரும் மேதா பட்கர் எனும் சமூக சேவகியும் வந்திருந்தார்.

ஹோலிக்கு முதல் நாளிரவு பழங்குடி மக்கள் சுமார் 60 டமாரங்களை அடித்துக் கொண்டு நடனக் களியாட்டங்களில் ஈடுபட்டனர். மறுநாள் காலை ஹோமம் வளர்த்து தங்கள் குல தெய்வமான மன்டோவிற்கு பூஜை செய்தனர்.

ஒரு காலத்தில் அந்த இடத்தில் சுமார் 52 பழங்குடி இனங்களைச் சேர்ந்த மக்கள் இருந்தனர். இப்போது எஞ்சிய சிலரும் தங்கள் இருப்பிடங்களை விட்டு ஓட வேண்டியிருந்தது. அவர்கள் கண் முன்னே, நர்மதையின் வெள்ளம் அவர்களுடைய இருப்பிடங்களை மூழ்கடித்தது.

# மன்னுயிர் காப்போம்!



"அப்பா, இன்று வகுப்பில் நாரையினத்தைச் சேர்ந்த 'பஸ்டார்டு' எனும் பறவையைப் பற்றி பாடம் நடத்தினார்கள். இந்தியாவில் இப்போது சிற்சில பறவைகள் மட்டுமே எஞ்சிஉள்ளனவாம்!" என்றாள் வீணா.

அதற்கு வீணாவின் தந்தை "ஆம் வீணா! ஒரு காலத்தில் இந்தியாவில் ஏராளமாக இருந்தது. அவை வேட்டையாடப்பட்டு விட்டதால் இன்று எண்ணிக்கையில் மிகவும் குறைந்து விட்டன. எஞ்சியுள்ள சில பறவைகளை ராஜஸ்தானில் உள்ள தேசியப் பூங்காவில் இப்போது காணலாம்!" என்றார்.

தொடர்ந்து, "அந்த ஒரு பறவை மட்டுமல்ல, வீணா! சாம்பல் நிறத்திலுள்ள மான்கள் இனமே கிட்டத்தட்ட அழிந்து விட்டது. 1960ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி, இந்தியாவில் சுமார் 3,000 புலிகள் வேட்டைக்காரர்களால் கொல்லப்பட்டன. ஆசியா கண்டம் முழுதும் பரவியிருந்த சிங்கங்களின் எண்ணிக்கை இன்று முந்நூறு மட்டுமே! அவற்றை கிர் வனத்தில் காண முடியும்! சிறுத்தைகளை இப்போது இந்தியாவில் காணவே முடியாது. திபெத் நாட்டில் மிக உயரமான இடமான லதாக்கில் வசிக்கும் ஆன்டிலோப் எனும் மான்கள் ஓர் ஆண்டுக்கு 20,000 வீதம் அவற்றின் தோலுக்காகக் கொல்லப் படுகின்றன!" என்று விவரித்துக் கொண்டே சென்றார்.

"இதையெல்லாம் நம்மால் தடுக்க முடியாதா அப்பா?" என்று வீணா கேட்டாள்.

"முடியும். ஆனால் முதலில் அதன் காரணத்தை தெரிந்து கொள்ள வேண்டும், வீணா" என்ற வீணாவின் அப்பா தொடர்ந்து, "விலங்குகளினாலான பொருளான புலித்தோல், யானைத்தந்தம், பல வித தோலாடைகள் ஆகியவற்றை தடை செய்தும் விற்கப்படுகின்றன. அவற்றை நீ வாங்க நிராகரித்தாலே விலங்குகள் வேட்டையாடப்படுவதற்கு நீ மறைமுகமாக முற்றுப்புள்ளி வைக்கிறாய். இந்த உலகில் நாம் வாழ்வது போல் அதற்கும் வாழ்வதற்கு உரிமையிருக்கிறது!" என்றார்.



# குறையைப் பார்!

பிரம்மதத்தன் காசியை ஆண்ட காலத்தில் போதிசத்வர் இந்திரப் பிரஸ்தத்தில் குருவம்ச மன்னராகப் பிறந்து தனஞ்ஜெயன் என்ற பெயரில் இருந்து வந்தார். நீதி தவறாமலும், தான தர்மங்களைச் செய்வதிலும் தனஞ்ஜெயனுக்கு நிகராக யாரும் இல்லை என்ற பெயர் ஏற்பட்டு அவரது புகழ் எங்கும் பரவியது.

அதே சமயம் கலிங்க நாட்டின் தலைநகரான தந்தபுரத்தைக் காளிங்கன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். ஒரு முறை அவனது நாட்டில் மழை இல்லாது போய் பஞ்சம் வந்து விட்டது. மக்கள் உணவு இல்லாமல் திண்டாடினார்கள். பலர் பட்டினி யால் துடி துடித்து இறந்தும் போயினர். இதைக் கண்ட காளிங்கன் தன் மந்திரிகளிடம் இவ்வாறு பஞ்சம் வரக் காரணம் என்ன என்றும் அதை எப்படிப் போக்குவது என்றும் யோசனை கேட்டான். அவர்களும் ''தர்மம் நிலை தவறிக் கெடும் போது இம்மாதிரிப் பஞ்சம் ஏற்படும். நீங்களே பாருங்கள்! இந்திரப்பிரஸ்த மன்னர் தனஞ்ஜெயன் நீதி தவறாமல் தர்மநியாயமாக ஆட்சி புரிவதால் அங்கு மாதம் மும்மாரி மழை பெய்கிறது'' என்றார்கள்.

அப்போது காளிங்கன் ''அப்படி யானால் நீங்கள் இப்போதே இந்திரப் பிரஸ்தம் போய் மன்னரைக் கண்டு அவர் கடைப் பிடிக்கும் முறைகளைக் கேட்டுத் தெரிந்து தங்கத் தகடுகளில் எழுதிக் கொண்டு வாருங்கள். நாமும் அவற்றைக் கடைப் பிடிக்கலாம்'' என்றான். மந்திரிகளும் அவ்வாறே செய்வதாகக் கூறிச் சென்றார்கள்.

அவர்கள் அங்கு தனஞ்செய மன்னனைக் கண்டு ''அரசே, நாங்கள் கலிங்கத்திலிருந்து வருகிறோம். எங்கள் நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்டு மக்கள் தவியாய் தவிக் கிறார்கள். தாங்கள் நீதி நெறி தவறாமல் ஆட்சி புரிவதால் தங்களது நாட்டு மக்கள் சுகமாக வாழ்ந்து

வருகிறார்கள். தாங்கள் கடைப் பிடிக்கும் மு றைகளை ந ாங்கள் கொண்டு வந்திருக்கும் தங்கத் தகடுகளில் எழுதிக் கொடுத்தால் அவற்றை எம்மன்னர் கடைப் பிடித்து மக்களை சுகப்படுத்தி வாழ வைப்பார்'' எனக்கூறித்தாம் கொண்டு வந்த தங்கத் தகடுகளை தனஞ் செயனின் முன் வைத்து நின்றான்.

தனஞ்செயன் அந்த மந்திரிகளுக்கு வணக்கம் செலுத்தி ''அமைச்சர்களே! இந்தத் தங்கத் தகடுகளில் தர்ம நெறிகளை எழுதிக் கொடுக்கும் தகுதி எனக்கு இல்லை. ஏனெனில் நானே ஒருமுறை நீதி நெறி தவறி விட்டேன். எங்கள் நாட்டில் மூன்று ஆண்டு களுக்கு ஒருமுறை கார்த்திகை விழா நடப்பது உண்டு. அப்போது மன்னர் ஒரு குளக்கரையில் யாகம் நடத்தி நான்கு திசைகளிலும் நான்கு அம்பு களை எய்ய வேண்டும். ஒருமுறை நான் எய்த அம்புகளில் மூன்று திரும்பக் கிடைத்தன. நான்காவது அம்பு குளத்தினுள் சென்று விட்டது. அந்த அம்பால் சில மீன்களும் சில தவளைகளும் இறந்தே இருக்க வேண்டும். இப்படியாக நான் தவறு செய்து விட்டேன். என்னை விட நீதி தவறாமல் உள்ள வேறு யாராவது இருக்கலாம். நீங்களே விசாரித்துப் பாருங்கள்'' என்றான்.

அது கேட்டு கலிங்க நாட்டு மந்திரிகள் ஆச்சரியம் அடைந்தார்கள். உடனே அமைச்சர்கள் த னஞ்செய மன்னனின் சகோதரனான நந்தனிடம் சென்று நீதி முறைகளை எழுதித்



தருமாறு வேண்டினார்கள். அவனோ ''நான் தினமும் மாலை வேளைகளில் அந்தப்புரத்திற்குச் செல்வது வழக்கம். சில நாள்களில் இரவு வேளைகளில் அங்கேயே தங்கியும் விடுவேன். அப்போது தேரோட்டி எனக்காக நான் வரும் வரை காத்துக் கொண்டு இருப்பான். சாட்டையை நான் எடுத்துக் கொண்டு போகும் போ து தேரோட்டி தேரை விட்டு விட்டு வீட்டிற்குப் போய் விடுவான். ஒரு நாள் சாட்டையை நான் தேரிலேயே விட்டு விட்டு அந்தப்புரத்திற்குப் போய் விட்டேன். அன்று நல்ல மழைப் பிடித்துக் கொண்டது. நான் அந்தப்புரத்தில் நனையாமல் இருந்து விட்டேன். ஆனால் என் தேரோட்டியோ மழையில் நனைந்து துன்பப்பட்டான். எனவே நீதி முறைகளை எழுதும் தகுதி எனக்கு இல்லை'' என்றான்.

அப்போது கலிங்க மந்திரிகள் அரசாங்க புரோகிதரிடம் சென்று கேட்டனர். அவரோ ''நான் ஒரு முறை நெறி தவறி விட்டேன். ஒரு நாள் அரண்மனைக்குச் செல்கையில் ஒரு தங்கத் தேரை அங்கு கண்டேன். அதைப் பார்த்ததும், 'இந்த மாதிரித் தேரை மன்னர் எனக்குத் தானமாகக் கொடுத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்' என எண்ணினேன். நான் அரண்மனைக்குள் சென்ற போது மன்னர் என் முகம் வாடி இருப்பது கண்டு ''நீங்கள் அந்தத் தேரை ஓட்டிச் செல்லுங்கள். அது உங்களுடையதே'' என்றார். அப்போது தான் 'நான் ஏன் பேராசை கொண்டேன்' என எண்ணி வருந்தினேன். தேரையும் நான் வேண்டாம் எனக் கூறி விட்டேன். இப்படி நான் ஆசைப்பட்டு நெறி தவறியவன்'' என்றார்.

கலிங்க நாட்டு மந்திரிகளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. முடிவாக அந்நாட்டு அமைச்சரிடம் சென்றனர். அவரும் ''நானும் ஒரு முறை நியாயம் தவறி விட்டேன். ஒரு நாள் ஒரு விவசாயியின் வயலை அளந்து பார்க்கப் போனேன். அங்கு ஓரிடத்தில் கோலை நட வேண்டி இருந்தது. அங்கு ஒரு சிறிய வளை இருந்ததால் அதில் கோலை ஊன்றினேன். அப்போது அதிலிருந்து வெளியே வந்த நண்டு சுருண்டு விழுந்து இறந்தது. இப்படி ஒரு பிராணியைக் கொன்ற நான் எப்படி நீதி நெறிகளை எழுதிக் கொடுக்க முடியும்?'' என்றார்.

கலிங்க நாட்டு மந்திரிகளுக்கு ஒரு யோசனை தோன்றியது. அது வரை தாம் கேட்டவற்றை எல்லாம் தங்கத் தகடுகளில் எழுதினார்கள். பின் அதனை எடுத்துக் கொண்டு கலிங்கத்திற்குப் போய் தம் மன்னனிடம் அவற்றைப் படித்துக் காட்டினார்கள். நீதி நெறி களை நன்கு தெரிந்து கொண்டு அதன் படி நடப்பதும் தம் குற்றங்களுக்கு வருந்தி திருந்துவதுமே சிறந்த வழி எனக் கண்டு அவன் தன் ஆட்சியின் குறைபாடுகளைத் தானே கண்டு அவற்றைக் களைந்தான். அதன் பின் காளிங்க மன்னனின் நாட்டில் தர்மம் தழைக்க மழை பெய்தது. மக்கள் சுகமாக வாழலாயினர்.





# மந்திரவாதியின் வாழ்க்கை

அரிமளம் என்ற கிராமத்தில் சோமு என்ற ஏழை வசித்து வந்தான். அந்த கிராமத்தில் வசித்து வந்த பெரும் பாலோர் விவசாயிகள். அவர்களுக்கு சொந்தத்தில் நிலங்கள் இருந்தது. விவசாயத்தைத் தவிர மற்ற தொழில்கள் எதுவும் அங்கு இல்லை. ஆதலால், உணவுப் பொருட்களைத் தவிர மற்ற எந்தப் பொருட்களையும் வாங்க கிராமத்து மக்களுக்கு நகரம் செல்ல வேண்டியிருந்தது.

சோமுவிற்கு சொந்தத்தில் நிலம் ஏதுமில்லை. மற்ற விவசாயிகள் தேவைப்பட்ட சமயங்களில் மட்டுமே சோமுவை கூலி வேலைக்கு அழைத்தனர். ஆதலால் சோமுவிற்கு நிரந்தர வருமானம் இன்றி, அவன் வாழ்க்கை நடத்த மிகவும் சிரமப் பட்டான். அவனுடைய மனைவி பார்வதி கணவனுடைய சிரமத்தைப் போக்க, வீட்டிலேயே பல தின் பண்டங்கள் தயார் செய்து கிராமத்து மக்களுக்கு விற்பனை செய்து வந்து, பணம் சம்பாதித்து வந்தாள். இவ்வாறாக தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்த அந்த தம்பதிக்கு ஒரு மகளும், ஒரு மகனும் இருந்தனர். மகள் தன் அன்னைக்குத் தின் பண்டங்கள் த யாரிப்பதிலும் த ன் தம்பியைக் கவனிப்பதிலும் உதவி செய்து வந்தாள்.

இப்படியிருக்கையில், ஒருநாள் அந்தக் கிராமத்திற்கு யோகானந்தர் என்ற சாமியார் தன் சீடர்களுடன் வந்தார். தினமும் கிராம மக்களுக்கு அவர் நல்ல பய னுள்ள அறிவுரைகள் வழங்கி வ ந்தார். ' 'நல்ல உ டல் நலமும், மன அமைதியும்தான் மக்களுக்கு நன்மை பயக்க வல்லது. ஆதலால் நலமாயிருக்க, நீங்களே தயாரித்த உணவுப் பண்டங்களை உண்ணுங்கள். வெளியிடத்தில் வாங்கி உண்பது உடல் நலத்திற்கு உகந்ததல்ல'' என்று அவர் ஒருநாள்

காயத்ரி சங்கரன்



உபதேசம் வழங்க, அன்று முதல், அனைவரும் விற்பனையாகும் தின் பண்டங்களை வாங்கி உண்பதை நிறுத்தி விட்டனர். அதன் விளைவு சோமுவின் குடும்பத்திற்கு விபரீதமாக முடிந்தது. சோமுவின் குடும்பம் பட்டினியால் அவதிப்பட்டது.

இதனால் சோமுவிற்கு அந்த சாமியார் மீது கோபம் ஏற்பட்டது. மனத்தில் ஆத்திரம் பொங்க, அவன் யோகாநந்தரின் ஆசிரமத்திற்குச் சென்று அவரை சந்தித்தான்.

''ஐயா! ஏதோ அரை வயிறுக்கு சாப்பிட்டுக் கொண்டு இருந்த என் குடும்பம் இன்று பட்டினியால் பரிதவிக்கிறது. அதற்குக் காரணம் நீங்கள்தான்!'' என்று அவரிடம் நடந்த விஷயத்தை சோமு விளக்கினான்.

''அப்பா! எல்லாரும் என் உபதேசத்தால் பயன் அடைந்து இருக்கின்றனர். நீ ஒருவன் மட்டும் தான் குறை கூறுகிறாய். பலருக்கு நன்மை பயப்பது சிலருக்கு தீங்காக முடியும் என்பது உலக நியதி!'' என்று சாமியார் சமாதானம் கூற, ''உபதேசிப்பதை விட்டு விட்டு நானும், என் குடும்பமும் அரை வயிறுக் கஞ்சியாவது குடிக்க வழி சொல்லுங்கள்!'' என்றான் சோமு.

சற்று நேரம் யோசித்த சாமியார், பிறகு சோமுவை நோக்கிப் புன்னகை புரிந்து, ''உன் வாழ்வு முன்னேறும் வழியை நீதான் கண்டு பிடிக்க வேண்டும். அதை நீயாகத் தெரிந்து கொள்ளும்வரை, உனக்கு உதவி செய்ய என் சீடனான பரதனை உன்னுடன் இருக்கச் செய்கிறேன். உனக்கு வேறு ஏதாவது நல்ல வேலை கிடைக்கும் வரை, அவன் தன்னுடைய மந்திர சக்தியால் உன்னையும் உன் குடும்பத்தினரையும் ரட்சிப்பான். நான் இன்று இந்த கிராமத்தை விட்டுச் செல்கிறேன்!'' என்று கூறியவர் தன் சீடனான பரதனை அழைத்து, ''பரதா! இந்த சோமு பரம ஏழை. என்னுடைய உபதேசத்தால் இவன் மனைவி செய்து வந்த தொழில் நின்று போயிற்று. பட்டினியால் வாடும் இவன் குடும்பத்திற்கு, நீ உதவி செய். இவர்களுடன் பதினைந்து நாள் தங்கியிரு. அதற்குள் சோமு, தன் வருமானத்திற்கு ஏதாவது ஒரு வழியைக் கண்டு பிடித்து விடுவான். பிறகு நீ என்னிடம் வா!'' என்று பணித்தார்.

தனது குருவை வணங்கி விட்டு, பரதன் சோமுவைப் பின் தொடர்ந்தான். சோமுவின் வீட்டிற்குச் சென்ற பரதன், ''உங்களுக்கு என்ன வேண்டும், சொல்லுங்கள்!'' என்று கூற, அனைவரும், ''எங்களுக்கு சாப்பிட ஏதாவது தாருங்கள்!'' என்றனர். அனைவரையும் தங்களுக்கு விருப்பமான உணவு வகைகளைக் குறிப்பிட்டு விட்டு, கண்களை மூடிக் கொள்ளச் சொன்ன பரதன், அவர்கள் அவ்வாறே கண்களை மூடிக்கொண்டதும், அவர்களுக்குப் பிடித்த உணவுகளை தன் மந்திர சக்தியால் கொண்டு வந்து விட்டான். அனைவரும் அவனுக்கு நன்றி கூறினர்.

அதற்கு பரதன், ''நினைவிருக்கட்டும்! பதினைந்து நாள் மட்டுமே, நான் இதையெல்லாம் செய்வேன். அதற்குள் பிழைக்கும் வழியை நீங்களே யோசித்துக் கண்டு பிடித்துக் கொள்ள வேண்டும்!'' என்றான்.

உடனே சோமு, ''உன்னுடைய மந்திர சக்தியை மட்டும் எனக்குக் கற்றுத் தந்து விடு! அது ஒன்றே போதும்! அதை வைத்து நாங்கள் பிழைத்துக் கொள்வோம்!'' என்றான்.

கடகடவென்று சிரித்த பரதன், ''அந்த வீணான ஆசையை விட்டு விடு! வேறு உருப்படியாக ஏதாவது யோசனை செய்!'' என்றான்.

''எது எப்படியாயினும், நான் உங்களிடம் இருந்து மந்திரசக்தியைப் பெற ஆவலாக இருக்கிறேன்!'' என்று சோமு பிடிவாதம் பிடித்தான்.

''நல்லபடியாக வாழ்வதற்கு



எத்தனையோ நல்ல வழிகள் உள்ளன. அவற்றை விடுத்து மந்திரம் கற்றுக் கொள்ள ஆசைப்படாதே! மந்திரத்தை வைத்து வாழ்க்கையில் பணம் சம்பாதிக்க நினைத்தால், அது உனக்குத் தீங்காக முடியும்'' என்று பரதன் எச்சரித்து விட்டுச் சென்று விட்டான்.

அன்றிரவு சோமுவும், பார்வதியும் நீண்ட நேரம் அதைப் பற்றி விவாதம் செய்தனர். பார்வதி சோமுவிடம், ''மந்திரவாதி சொல்வது உண்மை என்றே தோன்றுகிறது. மந்திர சக்தியைக் கொண்டு பணம் சம்பாதிப்பதால், நன்மைகளை விட தீமைகளே அதிகம் உண்டாகும் என்று என் உள்ளுணர்வு கூறுகிறது. அதனால் நாம் வேறு ஏதாவது வேலை செய்து பிழைக்க முடியுமா என்பதைப் பற்றி மும்முரமாக

சிந்திப்போம்'' என்றாள். சோமுவிற்கும் அது நியாயமாகத் தோன்றியது.

மறுநாள் முதல் அவர்கள் இருவரும் அலைந்து திரிந்து தீவிரமாக வேலை தேடினர். ஆனால் வேலை எதுவும் கிடைக்கவில்லை. சலித்துப்போன சோமு, மீண்டும் பரதனிடம் மந்திர சக்தியைப் பெற விரும்பினான். ஆனால் பரதன், ''அலாவுதீன் அற்புத விளக்கு கதை கேட்டிருக்கிறாயா? அதில் வரும் பூதம் விளக்கின் அடிமையாக இருந்தது. பாதாள பைரவி கதை தெரியுமா? அதில் மந்திரவாதியின் கதி என்னவாயிற்று தெரியுமா? நிதானம் தவறிய மந்திரவாதி அழிந்து போனான். ஆகவே மந்திர ச க்தி பெறுவதைப் பற்றி யோசிக்காதே! நீ வேறு ஏதாவது வழி கண்டு பிடி!'' என்றான். பார்வதியும் தன் கணவனுக்கு தை ரியமூட்டி வேறு ஏதாவது வழி யோசிக்கச் சொன்னாள்.

இவ்வாறு பரதன் வந்து பதினைந்து நாள்கள் முடிந்து விட்டன. பரதன் சோமுவையும் பார்வதியையும் நோக்கி, ''நான் பிரியும் நேரம் வந்து விட்டது. உங்களுக்கு ஏதாவது வழி தோன்றியதா? இல்லை, மந்திர சக்திதான் வேண்டுமா?'' என்றான்.

சோமுவும், பார்வதியும் ஒரே குரலில், ''வேண்டாம் உன்னுடைய மந்திர சக்தி! ஒருவாறாக, ப ணம் சம்பாதிக்க எங்களுக்கு ஒரு நல்ல வழி தோன்றி விட்டது. கிராமத்து மக்களுக்குத் தேவையான பொருட்களை நாங்கள் இருவரும் நகரத் தில் இருந்து வாங்கி வந்து விற்பனை செய்வோம். கிராமத்தில் உற்பத்தியாகும் தானியங்களை நகரத்திற்குச் சென்று விற்போம். இவ்வாறு விற்பனை செய்து அதில் வரும் லாபத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்துவோம்!'' என்றனர்.

''சபாஷ்! தீவிரமாக யோசித்தால் பிழைப்பதற்கு ஏதாவது ஒரு நல்ல வழி தோன்றுமென்று சொன்னேன் அல்லவா! உங்களுடைய இந்த யோசனை பிரமாதம்'' என்று அவர்களை வாழ்த்திவிட்டு பரதன் விடைப் பெற்றுக் கொண்டான்.





# மகாவிஷ்ணு

**அ**கிம்சை, அமைதியுடன் வாழ்தல் மத இனவேறுபாடில்லாத சமுதாயம் ஆகியவற்றைக் குறிக்கோளாகக் கொண்ட புத்த மதம் ஆலமரம் பரவுவதுபோல எங்கும் பரவ லாயிற்று. உயிரினங்களை மேம் படுத்த வந்த புத்தரை ததாகதர் என்றும் போதிசத்வர் என்றும் பகவானின் மறு அவதாரமாகவும் மக்கள் கருதிப் போற்றினார்கள். இது புத்தரின் கடும் பகைவனான தேவதத்தனுக்குப் பொறாமையையும் துவேஷத்தையும் வளர்த்தது.

புத்தர் தனது வயோதிக நிலையையும் பொருட்படுத்தாமல் ஊர் ஊராகச் சுற்றி அலைந்து தாழ்த்தப் பட்டோரையும், அபாக்கியவான் களையும், உயர் குலத்தோரால் அவமதிக்கப் பட்டவர்களையும் தன் அரிய அறிவுரைகளால் நல்வழிக்குத் திருப்பி தனது சீடர்களாக்கிக் கொண்டார். இதைக் காரணம் காட்டி புத்தரை இழிவுபடுத்தலாம் என தேவதத்தன் எண்ணினான். புத்தரை எதிர்ப்பவர்களை எல்லாம் ஒன்று திரட்டி தி ட்டம் ே பாட்டு ச தி புரியலானான்.

தேவதத்தனே புத்தரைக் கண்டு ''அஹிம்சையை நீங்கள் போதிப்பது சரியே. ஆனால் புத்த பிக்ஷுகள் மாமிச உணவை ஏற்கக் கூடாது என ஏன் உம் சீடர்களிடம் கூறவில்லை? அவர்கள் மாமிசம் சாப்பிடுவதை ஏன் தடை செய்யவில்லை'' எனக் கேட்டான்.

புத்தரும் ''தேவதத்தா! புத்த மதத்தில் சேர்பவர்கள் அஹிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றுதான் கூறி வருகிறேன். ஏழ்மையில் இருந்த



அவர்கள் எது கிடைத்தாலும் அதனைச் சாப்பிட்டுப் பசியை ஆற்றிக் கொள்ளும் பழக்கம் கொண்டவர்கள். எனவே அவர்கள் மாமிசத்தை சாப்பிட வேண்டியும் வருகிறது. பணக்காரர்கள் பணம் செலவு செய்து காய்கறிகளை வாங்கி சமைத்து தம் ருசிக்கு ஏ ற்பப் பு சிக்கிறார்கள். ஏழைகளிடம் அவ்வளவு பணம் ஏது? மானிடர்களுக்கு சேவை செய்யத் தம் உடலைக் காப்பாற்றிக் கொள்ள எவ்வளவு உ ணவு டே தவையோ அவ்வளவுதான் புத்த பிக்ஷ ுக்கள் சாப்பிடுகிறார்கள். அவர்கள் த ம் உணவைப் பிறரிடம் யாசித்தே பெறுகிறார்கள். அவர்களுக்கு உணவை அளிப்பவர்களிடம் ''நீங்கள் பிக்ஷுக்களுக்கு மாமிசம் கொடுக்கக் கூடாது. மரக்கறி உணவுதான் கொடுக்க வேண்டும் என்று என்னால் சொல்ல முடியுமா? முடியாதே. புத்தர்களில் மாமிசம் சாப்பிடுபவர்கள், மாமிசம் சாப்பிடாதவர்கள் என்றும் பிரித்து வைக்க முடியாது. எல்லாரையும் சமமாக பாவிக்கும் என் கொள்கைக்கு இது நேர்விரோதமாயிற்றே'' என்றார்.

தேவதத்தன் குறும்பாக ''அப்படியானால் பிக்ஷுக்கள் யார் எதைக் கொடுத்தாலும் அதனைச் சாப்பிட்டு விடுவார்களா?'' என்று கேலியாகச் சிரித்தவாறே கேட்டான். புத்தரும் ''பொதுமக்கள் தாம் எதைச் சாப்பிடுகிறார்களோ அதைத்தான் பிக்ஷுக்களுக்கும் கொடுப்பார்கள். அதனை ம றுக்காமல் ஏ ற்க வேண்டியது ஒரு பிக்ஷுவின் கடமை'' என்றார். அதைக் கேட்டபின் தேவதத்தன் வேறு எதுவும் பேச முடியாமல் தலைகுனிந்தவாறே அங்கிருந்து சென்றான்.

புத்தர் இப்படியே தாழ்த்தப் பட்டவர்களுக்கும் கீழ்குலத்தவர்களுக்கும் அறிவுரை கூறிக் கொண்டே போனால் விரைவில் உயர்குலத்தவரிடம் வேலை செய்ய யாருமே வரமாட்டார்கள் என்ற கவலை தேவதத்தனுக்கு ஏற்பட்டது. அதனால் வயோதிகப் பருவம் எய்துள்ள புத்தரை ஒழித்து விட்டால் தாழ் குலத்தவர்கள் நல்லறிவு பெற முடியாமல் என்றென்றும் உயர் குலத்தவர்களின் அடிமைகளாகவே இருப்பார்கள் என எண்ணினான்.

அவன் இந்த வேலையைச் செய்ய புத்தனின் சீடர்களில் ஒருவனான ஜீவகன் என்பவனைப் பிடித்தான்.

ஜீவகன் புத்தரைக் கடவுளாக மதித்து வந்தான். தேவதத்தன் அவன் மனத்தில் விஷவித்தை விதைத்து துர்போதனைகள் செய்து ஆசை காட்டித் தன் வலையில் வீழ்த்தி விட்டான்.

அவன் ஜீவகனிடம் ''புத்தர் சொல்வதெல்லாம் வெறும் பொய். உங்களை எல்லாம் சமம் என்று கூறி நடிக்கிறார். இ ப்படிச் ெ சால்பவர் உங்களைப் போல வாழ்ந்து காட்டுவாரா? நீங்களெல்லா சாப்பிடும் உணவையும் சாப்பிடு வாரா?'' என்று கேட்டான். ஜீவகனும் புத்தரைத் தன் வீட்டிற்கு பிக்ஷை ஏற்க அழைத்துப் பரீட்சித்துப் பார்ப்பதாகக் கூறினான்.

அதன்படியே ஜீவகன் புத்தரைத் தன் வீட்டிற்கு வந்து பிக்ஷை ஏற்கும்படி அழைத்தான். அவரும் அவனுடன் சென்றார். தேவதத்தன் மறைந்திருந்தவாறே அவர்களை கவனிக்கலானான். புத்தரை அழைத்து வந்த ஜீ வகன் அ வருக்கு உ ணவு அளிக்கத் தடுமாறினான். அது கண்டு புத்தர் ''ஜீவகா! எனக்காக எதுவும் தயாரிக்கவில்லையே என்று கவலைப்படாதே. நீ சாப்பிடும் உணவிலிருந்தே சிறிது கொடு. அது போதும்'' என்றார்.

ஜீவகனும் கை நடுங்க புத்தரின் முன் உணவை வைத்தான். ஜீவகன் கொடுத்ததை புத்தர் மகிழ்ச்சியுடன் எடுத்துச் சாப்பிட்டார். அப்போது அவரது உடல் நிலை சரியாக இல்லை. கிழவராகி விட்டபடியால்



அவரது ஜீரண சக்தியும் குறைந்திருந்தது. ஜீவகனோ அவர் சாப்பிட மாமிச உணவைத்தான் கொடுத்தான்.

புத்தர் ஜீவகனை ஆசீர்வதித்து விட்டுக் கிளம்பிச் சென்றார். ஜீவகன் அவருக்குக் கொடுத்த மாமிசம் அழுகியது. அதனால் ஜீவகன் மனத்தில் தான் பெரிய பாவச் செயலைச் செய்து விட்டதாக எண்ணம் ஏற்பட்டது. அது முதல் அவன் தான் குற்றவாளி என எண்ணி மனம் வருந்தினான். இதனால் அவன் முகம் வெளுத்து கவலையால் நாளுக்கு நாள் இளைத்துக் கொண்டே போகலானான்.

புத்தர் மாமிச உணவைச் சாப்பிட்டு ஜீவகனை ஆசீர்வதித்தது தேவதத்தனை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அவரைப் பரீட்சிக்க அழுகிய மாமிசம் கொடுக்கச் சொன்னதற்காக அவன் மிகவும் வருந்தினான்.

சரியான உணவு இல்லாததால் அதனைச் சாப்பிட்ட புத்தரின் உடல் நிலை மோசமாகியது. நாளுக்கு நாள் நலிந்து முடிவில் அவர் மரணத்தின் வாயிலை எட்டிவிட்டார். அவரது படுக்கையைச் சுற்றி அவரது சீடர்கள் நின்றிருந்தனர். அப்போது குற்றமுள்ள நெஞ்சுடன் ஜீவகன் தட்டுத் தடுமாறிய வாறே தேவதத்தனுடன் வந்தான். இருவரும் புத்தரின் கால்களில் விழுந்து தம்மை மன்னிக்குமாறு வேண்டினார்கள்.

புத்தரும் ''நீங்கள் வருந்த வேண்டாம். மரணம் என்பது ஏதோ ஒரு விதத்தில் வந்துதான் ஆக வேண்டும். நான் மோட்ச நிலையை அடைய நீங்கள் இருவரும் உதவி இருக்கிறீர்கள். அதற்கு நான் உங்களுக்கு நன்றி செலுத்த வேண்டும்'' என்றார்.

தேவதத்தன் மனம் மாறினான். அவன் அவரது பாதங்களைத் தொடு வதற்கு அவரிடம் அனுமதி கோரினான். புத்தரும் அவனது முதுகைத் தட்டிகொடுத்து ''தேவதத்தா! அறிவை மானிடர்களை உயர்த்தப் பயன்படுத்திச் செயல் படுவனே புத்தன். அப்படிப்பட்ட புத்தனுக்கு மரணமே இல்லை. மானிடவர்க்கத்தை உயர்த்த வந்த மகாத்மாக்கள் எல்லாம் புத்தரே. நீ சாதி மத அடிப்படையில்தான் என்னை ெ வறுத்தாயே ஒ ழிய தர்மத்தை நீ வெறுக்கவில்லை. உன் துவேஷ மனப்பான்மை என் மரணத் தோடு அழியட்டும். நீ புத்தமதத்தில்



சேர்ந்து அதனைப் பரப்பு.'' எனக்கூறி அவனது தலைமீது தம் திருக்கையை வைத்து ஆசி கூறினார்.

தேவதத்தனின் உடல் புல்லரித்தது. அவனை அறியாமல் அவனது வாய் ''புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சதணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி'' எனக் கூறியது. அவன் ''புத்த பகவானே! சரணம்'' எனக் கூறி இருகைகளையும் கூப்பி அவரை வணங்கினான்.

அன்று வைசாக பௌர்ணமி. முழு நிலா வானில் பிரகாசித்தது. புத்தர் நிர்வாண நிலையை அதாவது மோட்சத்தை அடைந்தார். அப்போது அந்த நிலா முன்னைவிடப் பன் மடங்கு ஒளிவிட்டுப் பிரகாசித்தது. புத்தரின் மறைவிற்குப் பின் அவரது அறிவுரைகள் புத்தமத சூத்திரங்களாயின. புத்தரைப் பகவானாகக் கருதி வழி பட்டனர். அவதார புருஷர் எனப் புகழ்ந்தனர்.

சூதர் இவ்விதமாக புத்தாவதாரத்தைக் கூறி முடித்து விட்டுக் கடைசி அவதாரமான கல்கி அவதாரம் பற்றிக் கூறலானார்.

மகாயுகம் என்பது கிருத, திரேதா, துவாபர, கலியுகங்கள் கொண்டது. மகாயுகத்தின் முடிவில் கலியுகம் வந்ததும் கலியின் சக்தி ஓங்கி உலகம் தத்தளிக்கும் ''கடவுள் இருக்கிறாரா?'' எனச் சிலரும் ''மனிதன் என்பவன் இருக்கிறானா?'' என்று சிலரும் கூற வாதவிவாதங்கள் நடைபெறும். மனிதர்கள் மதம், சாதி, இனம் என்ற அடிப்படைகளில் பிரிந்து விடு



வார்கள். சாதியின் பெயரால் வெறுப்பை வளர்த்து வன்முறை, எதேச்சாதிகாரம், துன்புறுத்தல் ஆகியவற்றைக் கண்மூடித்தனமாகச் செய் வார்கள். நல்லவர்களைக் காண்பதே அரிதாகிவிடும்.

கலியுகத்தில் அரசர்கள் அரக்கர்களைவிடக் கொடியவர்களாக இருப்பார்கள். மனிதர்கள் ஒருவரை ஒருவர் அடித்துக் கொன்று வாழ் வார்கள். அறிவாளிகளின் அறிவு கோடிக்கணக்கான மக்கள் அழியத் தான் உதவும். கிரகங்கள் வக்கிரங்களாகி இயற்கை தன் வழக்கப்படி செயல்படாமல் மாறுபடும்.

இந்த மாதிரியான கலியுகத்தில் சாம, தான, பேத, தண்டம் என்ற நான்கு முறைகளில் தண்டம் எனப் படும் தண்டிக்கும் முறையைக் கையாண்டு கொடியவர்களை ஒழித்து

நல்லவர்களைக் காத்து நிலை நிறுத்த கல்கி அவதாரம் எடுக்கிறார். சிவனார் தம் அம்சத்தோடு கூடிய வெள்ளைக் குதிரையை அவருக்குக் கொடுப்பார். அந்தக் குதிரை காலத்தைவிட வேகமாகச் செல்லக்கூடியது. அது வெண்புகையை வெளிவிட்டவாறே வால்நட்சத்திரம் போல வான வீதியில் விர்ரெனப் பறந்து செல்லக்கூடியது.

இக்குதிரை மீது கல்கி அமர்ந்து பெரிய வாளைக் கையில் ஏந்தி கெட்ட சக்திகளை அழிக்கக் கிளம்புவார்.

மின்னல்போல மின்னும் அந்த நாள் கொடிய சக்திகளை அழித்து விடும். கவசம் அணிந்த கல்கி நல்லவர் கண்களுக்கு அழகாகவும் கெட்டவர்கள் கண்களுக்கு பயங்கரமாகவும் தென்படுவார். கல்கி பல நாடுகளில் பல உருவங்களில் தென்பட்டு தன் வேலையைச் செய்து வருவார். அவர் கொடிய சக்திகளைத் தன் வாள் கொண்டு துரத்தி அடிப்பார். அவை அவருக்கு பயந்து ஓடிவிடும்.

கலியுகத்தோடு ஒரு மகாயுகம் முடிய மற்றொரு மகாயுகம் ஆரம்பமாகும். அப்போது எல்லாம் சரியாகிவிடும். முப்பத்து முக்கோடி தேவர்களும் கல்கியைத் துதிப்பார்கள். இது ஒவ்வொரு கலியுகத்தின் போதும் நடக்கும்.

பூமியில் வன்முறை எதேச்சாதிகாரம் முதலியன அழிந்து அமைதி நிலவும். மக்கள் சுக வாழ்வு வாழ்வார்கள். இவ்விதம் கலியுகத்தை முடித்ததும் கல்கி தம் உருவை மாற்றிக் கொள்வார். மீண்டும் கிருதயுகம் வரும். அப்போது மகாவிஷ்ணுவாக அவர் திகழ்வார். இப்படி ஒரு மகாயுகம் முடிந்து மீண்டும் ஆரம்பமாகும்.

எங்கும் நிறைந்தவர் என்பது விஷ்ணு என்பதன் பொருளாம். இப்படிப்பட்ட மகிமை வாய்ந்தவர் விஷ்ணு என சுதர் கூறி மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்கள் பற்றி விவரமாக எடுத்துச் சொல்லி மகாவிஷ்ணு கதையைக் கூறி முடித்தார். (முடிவுற்றது)



# கனவு பலித்தது



பாக்தாத் நகரில் அப்துல் என்ற ஓர் ஏழை வாலிபன் வசித்து வந்தான். அவனுக்கு நிரந்தரமாக எங்கும் வேலை கிடைக்காததால், பல நாள்கள் உண்ண உணவு கூட இல்லாமல் தவித்தான். அவன் தனியாளாக இ ருந்தால் பர வா யில்லை. ஆனால் அவனுக்கு மனைவி குழந்தைகள் இருந்தனர். அவர்களும் அப்துலுடன் சேர்ந்து பல நாள்கள் பட்டினி கிடக்க வேண்டியிருந்தது. அவனுடைய மனைவியால் இந்தத் துன்பங்களை பொறுத்துக் கொள்ள முடியாததால் அவனை கையாலா காதவன் என்று அடிக்கடி ஏசுவது உண்டு. ''நீ எதற்கும் லாயக் கில்லாதவன். சம்பாதிக்கத் திறமை அற்றவன். உனக்கு எதற்கு மனைவியும், குழந்தைகளும்? எங்களைப் பட்டினி போட்டுக் கொல்கிறாயே'' என்று பலவாறும் அவனைத் தூற்றுவதுண்டு.

மனைவியின் கடுஞ்சொற்களும், வறுமையும் போதாதென்பது போல் அவனை மற்றொரு நிகழ்ச்சியும் துன்புத்தி வந்தது. ஒவ்வொரு இரவும் அவனுக்கு அதிசயமான ஒரு கனவு மீண்டும் மீண் டும் வ ந்தது. அ வன் பாலைவனத்தில் தனியே நடந்து செல்வது போலவும், ஏதோ ஒரு குரல் அவனை, ''நிற்காதே நடந்து கொண்டேயிரு. காஹிராவுக்குச் செல். அதிருஷ்ட தேவதை உனக்காக அங்கே க ாத்திருக்கிறாள்'' எ ன்று கூறுவது போலவும் அந்தக் கனவு தினமும் தூக்கத்தில் வந்து தொல்லை யளித்தது. சில சமயம் உண்மை யாகவே நமது கனவு பலிக்குமா, நாம் காஹிராவுக்குப் போய் பார்க்கலாமா என்று தோன்றும். ஆனால் தான் காணும் இந்த அதிசயக் கனவை தன்



மனைவியுடன் பகிர்ந்து கொள்ள முயற்சிக்கையில், அவன் மனைவி ''எங்களை ஏமாற்றி விட்டு, உன் கடமையைப் புறக்கணித்துவிட்டு காஹிரா செல்லப் பார்க்கிறாயா?'' என்று அவனை சாடுவதுண்டு.

பாக்தாத் நகர எல்லையில் சென்று அப்துல் தி னமும் த ங்குவதுண்டு. அங்கிருந்து கூட்டம் கூட்டமாகச் செல்லும் வியாபாரிகளுக்குக் குடிக்கத் தண்ணீர் அளிப்பதும், அவர்கள் ஒட்டகங்களை கவனிப்பதுமாக சில எடுபிடி வேலைகளை செய்வதுண்டு. அவர்கள் மனமிரங்கித் தரும் சில காசுகளைக் கொண்டே அப்துல் வாழ்க்கை நடத்தி வந்தான்.

ஒருநாள் இரு வியாபாரிகள் தங்களுக்குள் பேசிக் கொள்கையில் அவர்கள் காஹிரா செல்வதாக அறிந்தான். தனது நெடு நாளையக் கனவான காஹிர ா பயணம் அவர்களுடன் சென்றால் நிறை வேறும் என்று அப்துல் அவர்களை அணுகித் தன்னையும் காஹிராவிற்கு அழைத்துச் செல்லும்படி வேண்டி னான். அவர்கள் சம்மதிக்கவே, தன் மனைவிக்குக் கூடச் சொல்லாமல் அப்துல் காஹிரா பயணத்தை மேற் கொண்டான்.

பாக்தாதிலிருந்து காஹிரா செல்வ தற்குப் பரந்த பாலைவனத்தின் வழியே செல்ல வேண்டும். அந்த வியாபாரிகளுடன் சென்ற அப்துல் பாலைவனத்தில் பல இடர்களை எதிர் கொள்ள நேரிட்டது. இறுதியில் ஒரு வழியாக அப்துல் காஹிராவை அடைந்தான். பல நாள்கள் பாலை வனத்தின் வழியே வந்த களைப்பு அவனை மேற்கொள்ள, ஒரு மரத் தடியில் படுத்து உறங்கி விட்டான்.

மாலை நேரம், உறங்கிக் கொண்டிருந்த அப்துலை யாரோ உலுக்கி எழுப்பினார்கள். ''யாரப்பா நீ? பிச்சைக்காரனா? '' என்று அப்துலிடம் உரத்த குரலில் விசாரித்த அந்த ஆள், அப்துலைக் கையைப் பிடித்து தரதரவென்று இழுத்துச் சென்று ஒரு சிறையில் தள்ளிப் பூட்டி விட்டான். அப்துல், அன்றிரவு சிறையில் கழித்தான். அதிசயத்திலும் அதிசயமாக அன்றிரவு வழக்கமாக அவன் காணும் கனவு வரவில்லை. மறுநாள் காலை அப்துலை சிறையிலிருந்து விடுவித்து அவனை நீதிமன்றத்துக்கு அழைத்துச் சென்றனர்.

அப்துலைப் பார்த்த நீதிபதி, ''நீ ஒரு பிச்சைக்காரன்தானே! காஹிரா நகரத்தில் பிச்சையெடுப்பது சட்ட விரோதமானது என்பது உனக்குத் தெரியாதா?'' என்றார்.

''ஐயா, நான் பிச்சைக்காரன் இல்லை'' என்று மன்றாடிய அப்துல், ''நான் ப ாக்தாதிலிருந்து எ ன் அதிருஷ்டத்தை நாடி காஹிராவிற்கு வந்துள்ளேன்'' என்றான்.

''நல்ல இடம் பார்த்தாய் உன் அதிருஷ்டத்திற்கு'' என்ற நீதிபதி. ''பாக்தாதில் கிடைக்காத அதிருஷ்டம் உனக்கு இங்கு கிடைத்து வி டுமா? பார்க்கப் போனால், இங்கிருந்துதான் பலர் அதிருஷ்டத்தைத் தேடி பாக்தாத் செல்கின்றனர்'' என்றார்.

பசியாலும், நீண்ட பயணத்தினாலும் களைத்திருந்த போதிலும் அப்துல் தான் காஹிராவிற்கு வந்த விஷயத்தைக் கூறினான். அதைக் கேட்ட நீதிபதி விழுந்து விழுந்து சிரித்தார்.

''நீ கண்ட கனவை நம்பியா இத்தனை தூரம் கஷ்டப்பட்டு வந்தாய்? பாலைவனப் பயணம் எவ்வளவு கடினமானது? நீ உயிரோடு இங்கு வந்ததே அதிசயம். நீ கண்ட கனவை மறந்து விடு. பாக்தாத் திரும்பிச் செல்'' என்ற நீதிபதி, சற்று யோசித்த பிறகு தன்னிடமிருந்து சில பொற்காசுகளை எடுத்து அப்துலுக்கு வழங்கினார்.

பிறகு, ''மறுபடியும் இந்தத் தவறை செய்யாதே. கனவில் கண்டது எல்லாம் பலிப்பதில்லை. உனக்குத் தெரியுமா? எனக்குக் கூட உன்னைப் போலவே தினமும் ஒரு கனவு வருகிறது. ஆனால் நான் கண்ட கனவை நம்புவதற்கு நான் ஒன்றும் முட்டாள்இல்லை'' என்றார்.

அப்துலுக்கு திடீரென அவர் பேச்சில் ஓர் ஆர்வம் உண்டாகி, ''ஐயா, தங்களுக்கு தினமும் இரவில் வரும் கனவு என்னவென்று சொல்ல முடியுமா?'' என்று கேட்டான்.

''சொல்கிறேன் கேள்'' என்ற நீதிபதி, ''எனக்கும் ஒவ்வொரு இரவிலும் ஒரு குரல் கட்டளை இடுகிறது. பாக்தாதின் கிழக்கு எல்லையில் ஒரு பாழடைந்த மாளிகை இருக்கிறது என்றும், அங்கு பின்புறம் ஒரு கிணறுக்கு அருகில் ஒரு பாறை உள்ளது என்றும், அந்தப் பாறையை நகர்த்தி விட்டு அந்த



இடத்தில் தோண்டினால் ஒரு புதையல் கிடைக்கும் என்றும் அந்தக் குரல் சொல்கிறது'' என்றார்.

நீதிபதியின் வார்த்தைகளைக் கேட்ட அப்துலுக்கு உற்சாகம் பிறந்தது. அவரிடம் விடை பெற்றுக் கொண்டு பாக்தாத் நோக்கிப் பயணம் சென்றான். இந்த முறை கொளுத்தும் பாலைவன வெயிலை அவன் பொருட்படுத்த வில்லை. ஏனெனில் அவனுக்குள் புதிய நம்பிக்கையும் உற்சாகமும் உண்டாகியிருந்தன.

பாக்தாதை சென்றடைந்த அப்துல் அதன் கிழக்கு எல்லையிருந்த பாழ் அடைந்த மாளிகையைத் தேடி அதனுள் நு ழைந்து கி ணறுக்கு



அருகேயிருந்த பாறையை அப்புறப் படுத்தினான். இதுவரை நீதிபதி கனவில் கண்ட மாதிரியே எல்லாம் நடந்தன. இனிமேலும் நடக்கிறதா என்பதை அறிய அந்த இடத்தில் பள்ளம் தோண்டினான்.

என்ன ஆச்சரியம்? அந்த இடத்தில் ஒரு பெரிய தோலினால் ஆன பை இருந்தது. மிகுந்த பரபரப்புடன் அதைத் திறந்து பார்த்த அப்துல் தான் வாழ் நாளில் காணாத அதிசயத்தைக் கண்டான். அந்தப் பையினுள் தங்கம், வெள்ளி, வைரம் அனைத்தும் இருந்தன. ஆம், அப்துல் கண்ட கனவு பலித்தே விட்டது. அதிருஷ்டம் அவனைத் தேடியே வந்து விட்டது.

மகிழ்ச்சி கரை புரண்டோட அப்துல் அந்தப் பையுடன் வீட்டை அடைந்தான். வழக்கப்படி அவன் மனைவி, ''இத்தனை நாளாக எங்கே தொலைந்தாய்? க ாஹிராவுக்குப் போயிருந்தாயா? பு தையல் கிடைத்ததா?' என்று இகழ்ச்சியாகக் கேட்டாள்.

''ஆம்'' என்றான் அப்துல் அமைதியாக. மனைவியின் கூரிய அம்பு போன்ற வார்த்தைகள் இம்முறை அவனைப் புண்படுத்த வில்லை. பையைத் திறந்து தனக்குக் கிடைத்த புதையலை தன் மனைவிக்குக் காட்டினான். அவன் ம னைவி தி கைத்துக் கல்லாய் சமைந்து போனாள்.

அப்துலின் மகிழ்ச்சிகரமான வாழ்க்கை அன்றிலிருந்து தொடங்கியது.



# மன்னரின் மைத்துனர்கள்

பல நாடுகளுடனும் போர் தொடுத்து வெற்றி வாகை சூடி, மகாசேனர் பாரதத்தின் சக்கரவர்த்தியானார். அவரிடம் போரில் தோற்றுப்போன மன்னர்கள் அனைவரையும் அவர்களுடைய ராஜ்ஜியங்களிலேயே சிற்றரசர்களாக்கி, அவர்களிடமிருந்து சக்கரவர்த்தி மகாசேனர் கப்பம் வசூலித்தார். வசூலாகும் தொகையைக் கொண்டு, த ன்னுடைய பரந்த சாம்ராஜ்ஜியத்தில் வாழும் அனைத்து மக்களும் நி ம்மதியாகவும் ம ன நிறைவுடனும் வாழ்வதற்குப் பல திட்டங்கள் வகுத்து, பொருள் செலவு செய்தார். அவருடைய சாம்ராஜ்ஜியத்திலிருந்த அனைத்து ராஜ்ஜிய மக்களும் நலமாக வாழ்ந்து வந்தனர். ஆனால் கோசல ராஜ்ஜியம் மட்டும் அதற்கு விதி விலக்காக இருந்தது.

கோசலநாடு மட்டும் ஏன் பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கி இருக்கிறது என்ற விஷயம் சக்கரவர்த்திக்குப் பு ரியவில்லை. ச க்கரவர்த்தியின் ஆஸ்தானப் பண்டிதரின் உறவினன் குணநிதி நகைச்சுவையாக பேசுவதில் வ ல்லவன். அவனை அடிக்கடி அழைத்து நகைச்சுவையாகப் பேசச் செய்து பொழுது போக்குவது சக்கரவர்த்தியின் வழக்கம். குணநிதி மி குந்த க டவுள் பக்தி உள்ளவன். கோசல நாட்டில் பல அழகான கோயில்கள் இருப்பதை அறிந்த அவன், கோசல நாட்டிற்குத் தீர்த்தயாத்திரை மேற்கொள்ளத் திட்டமிட்டான். சக்கரவர்த்தியும், அவனுடைய பயணத்திற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தார்.

குணநிதி கோசல நாட்டை அடைந்து, முதன் முதலாக ராமபுரி என்ற ஊரை அடைந்தான். அங்குள்ள சிவன் கோயில் பிரசித்தி பெற்றது. கோயிலில் நடராஜரின் விக்கிரகத்தைக் கண்ட குணநிதி உணர்ச்சி வசப்பட்டு, ''ஹரஹர மகாதேவா!''

25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை



என்று இரு கரங்களையும் கூப்பி உரத்த குரலில் கத்தினான். அடுத்த கணம் இரண்டு காவலர்கள் பாய்ந்து வந்து அவனைப் பிடித்தனர்.

திடுக்கிட்ட குணநிதி அவர்களைப் பார்த்து, ''என்னை ஏன் பிடித்துக் கொண்டீர்கள்? நான் தவறு ஒன்றும் செய்யவில்லையே!'' என்று கூற, அவர்கள், ''கோயிலுக்குள் சத்தம் போட்டு வழிபடுவது குற்றம். ஆகவே உன்னை பஞ்சாயத்துத் தலைவரிடம் இழுத்துச் செல்கிறோம்!'' என்றனர்.

தான் அந்த நாட்டிற்குப் புதியவன் என்றும், நாட்டின் விதிமுறைகளைப் பற்றித் தெரியாது என்றும், மன்னித்து விட்டு விடும்படியாகவும் குணநிதி வேண்டினான். ஆனால் அவர்கள் கேட்பதாயில்லை. அப்போது ஒரு இளைஞன் குணநிதியை நெருங்கி, ''இவர்களிடம் ஏன் மன்றாடுகிறாய்? பேசாமல், ஆளுக்கு ஒரு ரூபாய் லஞ்சம் கொடு. உன்னை விட்டு விடுவார்கள்!'' என்று ரகசியமாகக் கூறினான். உடனே குணநிதியும் அவர்களுக்கு லஞ்சம் கொடுக்க, அவர்கள் அவனை உடனே விட்டு விட்டுச் சென்று விட்டனர். தனக்கு தக்க சமயத்தில் யோசனை சொல்லிக் கொடுத்த இளைஞனுக்கு நன்றி தெரிவித்து விட்டு, ''கோயிலில் கடவுள் பெயரைச் சொல்லிக் கும்பிடுவது எப்படி குற்றமாகும்?'' என்றான் குணநிதி.

''முறையானது, முறையற்றது என்றெல்லாம் இங்கே ஒன்றும் கிடையாது. லஞ்சம் வாங்குவதற்காக அதிகாரிகள் விருப்பப்படி என்ன வேண்டுமானாலும் விதிமுறைகளை உண்டாக்குவார்கள். இதையெல்லாம் நாங்கள் எதிர்த்துக் கேட்பதில்லை. இதுவே உன்னை பஞ்சாயத்திற்கு அழைத்துச் சென்றிருந்தால், இதை விட அதிகமாக நீ லஞ்சம் கொடுக்க வேண்டி வந்திருக்கும்!'' என்றான் அந்த இளைஞன்.

''இதையெல்லாம் கோசல ராஜாவிடம் நீங்கள் புகார் செய்யலாமே!'' என்று குணநிதி கேட்க, ''பஞ்சாயத்துத் தலைவரைப் பற்றி ராஜாவிடம் எப்படி புகார் கூற முடியும்? அவர் ராஜாவின் மைத்துனராயிற்றே!'' என்றான் அவன். பிறகு குணநிதி தன்னைப்பற்றி அவனிடம் அறிமுகம் செய்து கொண்டான். அவன் வியப்புடன், ''நீ சக்கரவர்த்தியின் ஆஸ்தானப் பண்டிதரின்

உறவினன் என்பதை அவர்களிடம் தெரிவித்திருந்தால், உன்னிடம் லஞ்சம் கேட்டிருக்க மாட்டார்கள்!'' என்றான்.

பிறகு, குணநிதி சென்ற இடங்களில் எல்லாம் தன்னைப் பற்றி அறிமுகம் செய்து கொள்ள, அவனுக்கு கிடைத்த வரவேற்பு நன்றாக இருந்தது. இவ்வாறு கோசல நாடு முழுதும் தங்கு தடையின்றி குணநிதி நன்றாகச் சுற்றிப்பார்த்தான். சென்ற இடங்களில் எல்லாம், லஞ்சம் தலை விரித்தாடுவதைக் கண்டான். ஆனால் மக்கள் அதைப்பற்றி கிராம அதிகாரிகளிடம் புகார் செய்யாமலிருப்பதையும் கண்டு வியந்தான். காரணம் கேட்டால், பஞ்சாயத்து அதிகாரி ராஜாவின் மைத்துனர் என்றார்கள். எவ்வாறு ஒவ்வொரு கிராமத்து அதிகாரியும் ராஜாவின் மைத்துனராக இருக்க முடியும் என்று குணநிதிக்கு விளங்கவில்லை.

ஒருவாறாக தனது யாத்திரை முடிந்து தலைநகரம் திரும்பிய குணநிதி சக்கரவர்த்தியை சந்திக்கச் சென்றான். தான் கோசல நாட்டிற்குச் சென்றது முதல் கடைசி வரை தன்னுடைய அனுபவங்களை சக்கரவர்த்திக்கு விளக்கமாக எடுத்து உரைத்தைத் தொடர்ந்து ''சக்கரவர்த்தி! கிருஷ்ணருக்கு அடுத்தபடியாக கோசல நாட்டு ராஜாவைத்தான் கூற வேண்டும். அவருக்கு ஆயிரக் கணக்கில் மனைவிகள் போலும்! அதனால்தான், எங்கு பார்த்தாலும் அவருடைய மைத்துனர்களே



அதிகாரிகளாக இருக்கின்றனர்'' என்று நகைச்சுவையாகக் கூறினான்.

குணநிதி கூறியவற்றைக் கேட்டதும், சக்கரவர்த்தி பெருங்கவலையிலும், குழப்பத்திலும் ஆழ்ந்தார். அவருக்குத் தெரிந்தவரையில் கோசல மன்னனுக்கு இரண்டு மனைவிகள் மட்டுமே! அதில் ஒருத்தி சக்கரவர்த்தியின் தங்கை. மற்றொரு மனைவிக்கு ஆயிரக் கணக்கான சகோதரர்கள் எப்படி இருக்க முடியும்? அப்படியானால், ஏன் மக்கள் எல்லா அதிகாரிகளையும் மன்னரின் மைத்துனர்கள் என்று கூறுகின்றனர்? இதில் ஏதோ மர்மம் உள்ளது என்று நினைத்த சக்கரவர்த்தி உடனே கோசல நாட்டின் கிராமத்து அதிகாரிகளுக்கு ராஜாவுடன் உள்ள உறவைப் பற்றியும், அவர்களுடைய நடவடிக்கைகளையும் கண்காணிக்க, தனது தேர்ந்தெடுத்த ஒற்றர்களை

கோசல நாட்டிற்கு அனுப்பி வைத்தார். சக்கரவர்த்தியின் ஒற்றர்கள் சில நாள்களில் பயனுள்ள தகவல்களுடன் தலைநகரம் திரும்பினர். சக்கரவர்த்தியின் மைத்துனனான கோசல நாட்டு மன்னனின் இரண்டாவது மனைவியின் சகோதரனுக்கு வாள் பிடித்து சுழற்றக் கூடித் தெரியாது. ராஜாவின் மைத்துனன் என்ற ஒரே காரணத்திற்காக அவன் சேனாதிபதியாக நியமிக்கப் பட்டிருந்தான்.

அன்றிலிருந்து தகுதியற்றவர்களை ராஜாவின் மைத்துனன் என்று மக்கள் இளக்காரமாக கேலி செய்வது கோசல நாட்டில் வழக்கமாகப் போயிற்று. கோசல நாட்டு மன்னன் ஒருபோதும் அரசியல் விவகாரங்களை கவனிப்பதேயில்லை. ஆகவே எல்லா இடங்களிலும் தகுதிஅற்றவர்களே அதிகாரியாக நியமிக்கப் பட்டிருந்தனர். அனைவரும் நிர்வாகத்தைப் பற்றி சிறிதும் கவலைப் படாமல், லஞ்சம் வாங்கி பணம் சேர்த்துக் காலம் கழித்தனர்.

கிராமப்புற மக்கள் நாளடைவில் எல்லா அதிகாரிகளையும் ராஜாவின் மைத்துனர்கள் என்றே நம்பத் தொடங்கினர்.

இதைக் கேட்டதும் சக்கரவர்த்திக்குத் தன் தவறு புரிந்தது. பயனுள்ள திட்டங்களைத் தீட்டினால் மட்டும் போதாது, அவற்றை செயற்படுத்தும் அதிகாரிகள் ஒழுங்காக வேலை செய்கின்றனரா என்று கண்காணித்தல் அவசியம். கோசல நாட்டு மன்னன் தனது மைத்துனனாக இருந்தபடியால், மற்ற சிற்றரசர்களிடம் இருந்தது போல் அவனிடம் சக்கரவர்த்தி கண்டிப்பாக நடந்து கொள்ளவில்லை. அதனால்தான் கோசல நாடு இவ்வளவு பின் தங்கியுள்ளது என்ற உண்மை சக்கரவர்த்திக்கு உறைத்தது.

உண்மை தெரிந்தவுடன், சக்கரவர்த்தி தனது மைத்துனனை வன்மையாகக் கண்டித்தார். அதன் பின் தன்னுடைய திட்டங்களை ஒழுங்காகச் செயற்படுத்தக் கூறி விட்டு, அவனுடைய நடவடிக்கைகளை தானே கண்காணிக்கத் தொடங்கினார். சக்கரவர்த்தியின் முயற்சிகளினால், கோசலநாடு விரைவாக பொருளாதாரத்தில் முன்னேறியது.



# சூர்யா

## வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

வசந்தன் வீரசிம்மனுடன் வாட்போர் புரிந்து அவனைக் கொல்ல முயலும் போது, ஜெயானந்தர் அவனைத் தடுக்கிறார். வீரசிம்மனின் தீய செயல்களை அவனுக்கு ஜெயானந்தர் நினைவூட்டும் போது, வீரசிம்மன் மெதுவாகப் பின்னால் நகர்ந்து, கொண்டே சென்று, மலையிலிருந்து தலைகுப்புற விழுந்து விடுகிறான்.





ஓவியம் : காந்தி அய்யா



















நாளை சூர்யாவுடன் அரண்மனைக்கு நீ செல்வது நல்லது. நீ ஆசிரமத்தில் இருந்து அப்படியே சென்று விடு.
குருவே, இது எனது பாக்கியம்.
உங்கள் இருவரின் தந்தைமார்களும் நெருங்கிய நண்பர்களாயிருந்தனர்!
சூர்யா வந்து விட்டார்!
சுகன்யாவையும் உன்னுடன் நாளை அரண்மனைக்குச் செல்லுமாறு சொல்லி இருக்கிறேன்!
அது எனக்குக் கிடைத்த பாக்கியம்.


சுகன்யா அவர்களிடமிருந்து விடை பெறுகிறாள்.
நான் பொழுது விடிவதற்குள் வந்து விடுகிறேன்!
ஜெயானந்தரும், சூர்யாவும் ஆசிரமத்திற்குத் திரும்புகின்றனர்.
செல்வதற்கு முன் உன்னுடைய பெற்றோரின் சமாதிக்குச் சென்று அவர்களுடைய ஆசியைப் பெற்றுச் செல்வாய்!
அப்படியே செய்கிறேன்!


வசந்தன் சுகதேவரை சந்திக்கிறான்.
கடைசியில் வீரசிம்மனை கடவுளே தண்டித்து விட்டார். இனி நாட்டில் நியாயமும், நேர்மையும் செழிக்கும்!
மன்னன் சாந்திதேவரின் மகன்தான். தங்களின் அடுத்த மன்னன் என்று மக்களுக்குத் தெரிந்தால் அவர்கள் மிகவும் மகிழ்வார்கள்.
ஜெயானந்தர் கூறியபடி நான் அரண்மனைக்குச் சென்று இளவரசரை வரவேற்க ஏற்பாடுகள் செய்கிறேன். மானவேந்திரர் சாந்திபுரத்தில் தான் இருக்கிறாரா?
உங்களுடன் அரண்மனையில் அவர் சேர்ந்து கொள்வார். நான் பெரிய ராஜாவைக் கூட்டிவர அமிருதபுரிக்குச் செல்கிறேன். தனது பேரனைக் கண்டு அவர் ஆனந்தப் படுவார்.

வசந்தன் மானவேந்திரரை சந்தித்து சூழ்நிலையை விளக்குகிறான்.




சுகதேவர் அரண்மனையை அடைகிறார்.




சுகதேவரும், மெய்க் காப்பாளர்களும் அரண்மனையை நோக்கிச் செல்கின்றனர்.




அவ்வாறே மெய்க்காப்பாளர்கள் அரண்மனையைச் சூழ்ந்து கொள்கின்றனர்.





ஒவ்வொருவரும் தங்களுக்கென்று குறிப்பிட்ட இடத்தில் நிற்கின்றனர்.



சுகதேவர் அரண்மனைக்குள் நுழைகிறார்.




அரண்மனையின் பிரதம பாதுகாப்புக் காவலர்களின் தலைவன் சகல மரியாதைகளுடன் சுகதேவரை வரவேற்கிறான்.

தலைவரே! மகாராஜா நேற்றிரவு சேனாதிபதியுடன் வெளியே சென்றவர் இன்னும் திரும்பவில்லை.

அவர் இனி வரமாட்டார். உங்களுக்கு புதிய மன்னர் ஒருவர் வருவார்.

புதிய மன்னரா? அவர் யார்?

வேறு யாருமில்லை. காலஞ்சென்ற மகாராஜா சாந்திதேவரின் அருமைப் புதல்வன் சூர்யா! அவரை வரவேற்கத் தயாராகுங்கள்!



# இது ஒரு கலை விழாக்காலம்!

டிசம்பர் மாதம் தொடங்கி விட்டாலே போதும்! தமிழக மக்களின் செவிகளுக்கும் கண்களுக்கும் தொடர்ந்து மூன்று மாதங்கள் விருந்துதான். டிசம்பர் மாத இடையில் தோன்றும் **மார்கழித் திருநாளில்**, சென்னை நகரில் இருபதிற்கும் மேற்பட்ட சபாக்களில் நடக்கும் முந்நூறுக்கும் மேற்பட்ட கச்சேரிகளில் இரண்டா யிரத்திற்கும் மேலான இசைக்கலைஞர்கள் பங்கேற்று செவிக்கு விருந்தளிப் பார்கள். அடுத்து, கர்னாடக சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராஜ சுவாமிகளின் பிறந்த ஊரான திருவையாறில், நூற்றுக்கணக்கான கர்னாடக இசைக் கலைஞர்களின் **தியாகராஜ ஆராதனை** இசை நிகழ்ச்சி ஜனவரி மாதத்தில் நடை பெறும்.



அதே சமயத்தில் **மாமல்லபுரத்தில் நடனவிழா** தொடங்கி விடும். பரதநாட்டியம், குச்சிப்புடி, ஒடிசி, கதக், கதக்களி ஆகிய நடனக்கலைகளில் தேர்ந்த கலைஞர்கள் மாமல்லபுரத்துக் கோயில்களின் பின்னணியில் திறந்தவெளி அரங்கில் நடனமாடி பார்ப்பவர்களை மெய் மறந்து போகச் செய்வார்கள். இந்த நடன விழா பிப்ரவரி மாதத்தின் நடுப்பகுதி வரை தொடரும். அதன் பிறகு சிதம்பரத்தில் **நாட்டியாஞ்சலி விழாத்** தொடங்கிவிடும். நடனக்கலையின் நாயகரான சிவபெருமான் நடராஜ மூர்த்தியின் அழகினைக் காண இந்தியாவிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் ஆண்டுதோறும் வருவதுண்டு. இந்த விழாவில் இந்தியாவில் பல பாகங்களில் இருந்தும் நாட்டியக் கலைஞர்கள் பங்கேற்கின்றனர். நடராஜப் பெருமானின் சன்னிதியில் நாட்டியம் ஆடும் பேறு கிடைத்த தங்களுக்கு, அந்த இறைவனின் ஆசியே கிடைத்துவிட்டதாக நாட்டியக் கலைஞர்கள் எண்ணுகிறார்கள்.

இந்நிகழ்ச்சிகள் தமிழக அரசின் சுற்றுலாக் கழகம் ஏற்பாடு செய்கிறது.

## உங்கள் விஞ்ஞானம்

# நமது உடலின் பெரிய உறுப்பு



ஜீரண உறுப்புகளில் ஒன்றான கல்லீரல்தான் நமது உடல் உறுப்புகளில் மிகப் பெரியது. அதை நமது உடலின் இரசாயனத் தொழிற்சாலை என்று குறிப்பிடலாம். வயிற்றின் வலப்பக்கம் உதரவிதானத்திற்குக் கீழே இது அமைந்துள்ளது.

கல்லீரலை நம் விரல்களால் தொட்டுப் பார்த்து உணர முடியாது. ஆனால் நோயின் வசப்பட்டு அது விரிவடைந்தால், அப்போது உணர முடியும். கல்லீரலின் முக்கியமான பணிகள் இரண்டு. பல ரசாயனப் பொருட்களை உற்பத்தி செய்வதும், நச்சுப் பொருட்களை செயலிழக்கச் செய்வதுமே அதன் முக்கியப் பணிகளாகும். கொழுப்புச்சத்தை ஜீரணிப்பதும், குளுகோசை குளுகோஜனாக மாற்றுவதும், 'கொலஸ்ட்ரால்' எனும் பொருளை உருவாக்குவதும் அதன் மற்ற வேலைகளில் சிலவாகும்.

## உங்கள் சுற்றுப்புறம்

# விதை மாலை

பழங்காலத்திலிருந்தே மணி மாலைகள் மனிதர்களை குறிப்பாகப் பெண்களை கவர்ந்திருக்கின்றன. மரகதம், கோமேதகம் ஆகிய கற்களால் ஆன மாலைகளும், பிளாஸ்டிக், கண்ணாடி மணி மாலைகளும் கூட பெரிதும் விரும்பப்பட்டு வருகின்றன. ஆனால் ஒரு செடியின் விதைகளைக் கொண்டு செய்யப்படும் மாலையைப் பற்றி கேள்விப்பட்டுஇருக்கிறீர்களா? அந்தச் செடியின் பெயர் கண்ணீர்த் துளிகள். அந்த விதைகளில் இயற்கையாகவே இரு முனைகளிலும் ஒரு துளை உண்டு. அதன் வழியே நூலை அல்லது கம்பியை கோத்து மாலை செய்யலாம். அந்த விதைகளை மேரியின் கண்ணீர்த் துளிகள் என்றும் குறிப்பிடுவதுண்டு. வெண்மையாகத் தோற்றமளிக்கும் அந்த விதைகளைத் தரும் செடிகள் சர்வ சாதாரணமாக சாலையோரங்களில் வளர்ந்திருக்கும்.



## உங்களுக்குத் தெரியுமா?

### கொசுவை விரட்ட...



உறக்கத்தில் இ ருப்பவர்கள் உறக்கம் கலைந்து எழுந்திருக்க சில நிகழ்ச்சிகள் காரணமாக உள்ளன. அதிகாலையில் பறவைகளின் குரல் ஒலியைக் கேட்டு எழுந்து இருக்கலாம். உறங்கவே முடியாமல் கொசு கடிப்பதன் மூலம் உறக்கம் முற்றிலும் கலைந்து விடலாம். கொசுக்கடியிலிருந்து தப்புவதற்கு எத்தனையோ கொசுவர்த்திகள் இப்போது கிடைக்கின்றன. ஆனால் அவை பயனற்றவையாக உள்ளன.

தில்லி ஐ.ஐ.டி.யைச் சேர்ந்த சில ஆ ராய்ச்சியாளர்கள் கொசுக் கடியில்இருந்து தப்ப ஒரு வழி கண்டு பி டித்துள்ளனர். பெப்பர் மிண்ட் செடியிலிருந்து எடுக்கப் படும் பெப்பர்மிண்ட் எண்ணெய் கொசுக்களை விரட்ட வல்லது. கொசுக்களினால் ஏற்படக்கூடிய மலேரியாவும் இதனால் வராமல் தடுக்கப்படுகிறது.

## நம் இந்தியா

### இன்னிசை விழாக்கள் நிரம்பிய டிசம்பர் மாதம்



1. தென்னிந்திய சாஸ்திரீய சங்கீதத்திற்கு கர்நாடக சங்கீதம் என்று பெயர் கொடுத்தவர் யார்? எப்போது கொடுத்தார்?
2. அக்பர் சக்கரவர்த்தியின் அவையில் இருந்த ஆஸ்தானப் பாடகர் யார்? எந்த சங்கீதத்தை அவர் பிரபலமாக்கினார்?



3. கர்நாடக சங்கீதத்தின் மும்மணிகள் என்று குறிப்பிடப்படுபவர்கள் யார்?
4. முஸ்லிம் மன்னர்களால் பிரபலப்படுத்தப்பட்ட 'கஜல்' எனும் சங்கீதம் முதன் முதலில் எங்கு தோன்றியது? ஒரு பிரபல கஜல் பாடகியின் பெயரை குறிப்பிடவும்.



5. சிவபெருமான் மீது தமிழில் இயற்றப்பட்டுள்ள பக்திப் பாடல்களின் தொகுப்பிற்கு என்ன பெயர்?



(விடைகள் 70ஆம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**


NARAYANAMURTHY TATA


NARAYANAMURTHY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ளதபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவுபிப்ரவரி 2006 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

**வாழ்த்துகள்!**

**பரிசு பெற்றவை**

**அக்டோபர் 2005 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

*க.அகல்யா,*
*சுந்தரி இல்லம், 7, நடுநிழல்*
*சாலை, ரயில் விஹார்,*
*சாத்தனூர் சாலை,*
*திருச்சி-21.*





''அச்சமின்றியும் விளையாடலாம் ;
அச்சமூட்டியும் விளையாடலாம்.''

## நம் இந்தியா - விடைகள் (பக்கம் 65)

1. விஜய நகர சாம்ராஜ்ஜியத்தின் முதல் மந்திரியான வித்தியா ரண்யர்; 15ஆம் நூற்றாண்டு.
2. தான்சேன்; துருபத்.
3. தியாகராஜர், முத்துசாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரி.
4. பெர்சியா (ஈரான்); பேகம் அக்தர்.
5. தேவாரம்.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

